


# கல்கி

*ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா..*

KALKI • 06.06.2010 • ரூ.10.00 • 96 பக்கங்கள்

ஆறு வாரப்
போட்டி அதிரடி!
நங்கக் காசு
பரிசு!

தவற
தீங்க...

செந்தமிழ்ப்
போட்டி
அறிவிப்பு!

டைக்கால
காண்டாட்டம்
ல் ஜில்
பெஷல்

ஓடிப்போச்சு
கோடை...

# புற்றுநோய்க்கு ஒரே இடத்தில் தீர்வு!

## ONE STOP SOLUTION FOR CANCER

- PET CT SCAN
- All Endoscopies
- Linear Accelerator & Brachy Therapy
- Radiation
- IGRT
- Surgical Oncology
- Medical Oncology



- பெட் சீடி ஸ்கேன்
- அனைத்து என்டோ ஸ்கோபி
- கதிர்வீச்சு
- லீனியர் ஆக்ஸிலரேடர் & உட்கதிர்வீச்சு
- IGRT
- புற்றுநோய் அறுவை சிகிச்சை
- புற்றுநோய் மருத்துவம்

**இலவச ஆலோசனைக்கு:**

**(044) 2246 9200**
**(044) 66 300 300**

**PET CT CENTRE AT CANCER INSTITUTE (WIA)**
**CANAL BANK ROAD, GANDHI NAGAR, ADYAR, CH-20**

**24 HRS PHARMACY & AMBULANCE SERVICES AVAILABLE**

# Dr. KAMAKSHI MEMORIAL HOSPITAL



# 1, Radial Road, Pallikaranai, Chennai - 600 100.
Ph: 2246 9200, 66300300 Fax : 22463282 66300400
E-mail: info@drkamakshimemorialhospital.org.
Website: drkamakshimemorialhospital.org.

# கல்கி

06.06.2010





கோடை நினைவுகள்

# "வெல் வெல் வெகட

**கோ**லிவுட் காமெடியில் கோலாகலமாய் களைகட்டி வரும் சிரிப்பு நடிகர் பாஸ்கரிடம், நம்ம சம்மர் ஸ்பெஷலுக்கு உங்களோட அனுபவம், ஆனந்தம் அறிவுரை என்ன? ஆனால் அது சம்மரோட சம்பந்தப்பட்டு இருக்கணும்னு கண்டிஷன் போட்டுக் கேட்டபோது... அது எனக்கு ஜுஜுஜுபின்னு சொல்லி ஆரம்பித்தார்.

"அதுவும் இதே மாதிரி ஒரு அக்னி நட்சத்திரக் காலம்தான். நான் சினிமாவில் பிரபலமாகுறதுக்கு முன்னாடி நடந்த சம்பவம். என்னோட ஃப்ரெண்ட் டுடுவும் நானும் திருவண்ணாமலைக்குப் போய் சாமி கும்பிட்டு, வயிறு முட்ட சாப்பிட்டுட்டுப் பார்த்தா 40 ரூபாய்தான் பர்ஸில் இருந்தது. மெட்ராஸுக்கு வர்றதுக்கு அது போதாது. தலையில துண்டைக் கட்டிக்கிட்டு லாரியில போக, ரோட்ல நின்று ட்ரை பண்றோம். ஒரு லாரியும் நிக்கலை. வெறுத்துப் போய் தலையில இருந்த துண்டை உதறி தோளில் போட்ட அந்தக் கணமே, சட்டென ஒரு லாரி பிரேக் போட்டு எங்களை ஏத்திக்கிட்டது. ரொம்பக் குஷி. அண்ணாமலையார்க்கு அரோகரான்னு சொன்னேன்; அவர் மகிமையே மகிமை. மெட்ராஸ் வந்ததும் டுடு

இறங்கினான். அப்புறம் நான் இறங்க எந்திரிச்சபோது டிரைவர் சொன்னார் - "ம்ம்... பெரியவரே பார்த்து மெதுவா இறங்குங்க. வயசான காலத்துல சாமி கும்பிட்டு நடுரோட்ல நிக்கிறீங்கன்னு ஏத்துனேன். தாவி இறங்கிறதைப் பார்த்தா சாமிக்கிட்டேயே போயிடுவீங்கப்போல." அந்த டிரைவர் அந்த டயலாக்கைச் சொல்லும்போது, எனக்கு வயசு 30 தாங்க. லாரி என்ன ஏத்திக்கிட்டது இறைவன் மகிமையில்லை; என்னோட இளவழுக்கையின் மகிமைதான்னு தெரிஞ்சது. தலைநிறைய முடி இருந்தப்ப யாரும் சினிமா சான்ஸ் தரலை. முடி என்னைவிட்டுக் கழன்று போன போதுதான் படவாய்ப்பு பட்டுன்னு வந்து ஒட்டிக்கிட்டது. கோடையில எனக்குப் பிடிச்ச ட்ரிங்க்ஸ் கூட இளநீர்தான். அதுவும் வழுக்கையா இருக்கணும். ஒவ்வொரு முறையும் ...டையில நான் கேட்கிறப்ப, இளநீர் ...க்கிறவன் உதட்டில ஒரு சிரிப்பு வரும் ...ருங்க. அதுக்குப் பேருதான் கோடைச் ...ரிப்பு. எனக்குத் தெரியும், அது என் தலை ...ழுதுன சைலண்ட் காமெடியோட ...சல்ட்டுன்னு. சம்மர் மெஸேஜ்னு ஒண்ணு ...சால்லணும்னா, ஒவ்வொரு இழப்புக்கு ...ன்னாடியும், ஒரு வரவு வரமா வரும். ...ன்னிப்பா கவனிச்சி உருப்படப் பாக்கணும். 'வெல் வெல் வெகட்ட தமா புபகூ" ...ரியலையா? வெயில் வெயில்னு ...வரங்கெட்டதனமா புலம்பக் கூடாதுன்னு ...சான்னேன். சொல்றப்ப நடுவுல சில எழுத்து ...காட்டிடுச்சி நம்ம முடியைப் போல... ...ஹி... ஹி..."

- ராகவ்குமார்



**கல்கி**


பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

ஆசிரியர் : சீதா ரவி
உதவி ஆசிரியர்கள் :
கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா
வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
பா.கோபால்

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

ஆசிரியர் குழு :
044 - 4343 8822
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

விற்பனை பிரிவு :
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com



இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
www.sangapalagai.com



சந்தா விவரம் (ஒரு வருடம்) :
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32



இதழில் வெளியாகும் விளம்பரங்களின்
உண்மைத் தன்மைக்கு
கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

# நீங்கள் கேட்டவை - தராசு

● ப.கோபிபச்சமுத்து,
கிருஷ்ணகிரி

? "மக்கள் சேவையில் ஈடுபாடு கொண்ட மருத்துவர்கள் இல்லாதது வருத்தத்தைத் தருகிறது" என்று சுகாதாரத் துறை அமைச்சர் பன்னீர்செல்வம் கூறியிருக்கிறாரே?

! சுயநலமின்றி மக்கள் சேவையில் ஈடுபாடு கொண்ட அரசியல்வாதிகள் இல்லாதது அதைவிட அதிகமான வருத்தத்தை அளிக்கிறதே...! "மருத்துவரே முதலில் உங்களைக் குணப்படுத்திக் கொள்ளுங்கள்" என்ற மூதுரையை இன்று அரசியல்வாதியை நோக்கித்தானே சொல்ல வேண்டியிருக்கிறது.

● என்.பாலகிருஷ்ணன்,
மதுரை

? 'டாஸ்மாக் கடைகளை மூடிவிட்டால் அந்தத் தொழிலாளிகள் என்ன ஆவார்கள்?' என்று முதல்வர் கேள்வி எழுப்புகிறாரே?

! அந்தத் தொழிலாளர்களை உருவாக்கிய முதல்வர்தான் அவர்களின் மறுவாழ்வுக்கும் வழி

* பட்டுக் கொள்ளா பதில்கள்!

## சமீபத்திய சொதப்ப



* நொண்டிச் சமாதானம்!

கண்டுபிடிக்க வேண்டும். அது அசாத்தியமான காரியம் அல்ல. தாம் கூறுவது நொண்டிச் சமாதானம்; உண்மைக் காரணமல்ல என்பது கருணாநிதிக்கே தெரியும்.

● என்.காளிதாஸ்,
சிதம்பரம்

? பிரச்னை அடிப்படையில் மத்திய அரசுக்கு ஆதரவு நீடிக்கும் என முலாயம் சிங் யாதவ் கூறியுள்ளாரே?

! முலாயமுக்கு காங்கிரஸால் ஏற்படுத்தப்படும் பிரச்னைகளின் அடிப்படையில் ஆதரவு அல்லது எதிர்ப்பு நீடிக்கும் என்று பொருள் கொள்க.

● ச.நாராயணன்,
திருநெல்வேலி ☐

? மாவோயிஸ்டு



மேலெழும் மைனஸ்!



பிரச்னை பாலிடிக்ஸ்!



மருந்துல வருத்தம்!

ளும் நக்ஸல்களும் நடத்தும் கொலை வெறித் தாக்குதலில் அப்பாவிகளும் காவல்துறையினரும் கொத்துக் கொத்தாக உயிரிழந்தும் அரசு வெறும் வாய்ப் பந்தலில் சூரத்தனம் காட்டிக் கொண்டிருக்கிறதே? இது கையாலாகாத்தனம் இல்லையா?



து?

கிலுகிலுப்பை சட்டம்!

! ஆமாம், ஆமாம்! தாந்தேவாடா தாக்குதலை மாவோயிஸ்டுகள் திட்டமிட்டதே மத்திய ரிசர்வ் போலீஸ் தொலைத்த ஒரு ஒயர்லெஸ் செட் உதவியுடன்தான் என்பது தெரிய வந்துள்ளது! அதைப் பயன்படுத்தி ஒட்டுக் கேட்டு, போலீஸாரின் நடமாட்டம் அறிந்து கண்ணிவெடித் தாக்குதல் நடத்தியுள்ளனர்! சரியான பயிற்சி அளிக்கப்படாத போலீஸார், பலிகடாக்கள் ஆக்கப்படுகின்றனர் என்பது தெளிவு.

● வி.பெரியசாமி, அரியலூர்

*? கல்வி,வேலை வாய்ப்பு உரிமை சட்டங்களை அடுத்து, அனைவருக்கும் உணவு கிடைக்க புதிய சட்டம் கொண்டு வரப்படுமென சோனியாகாந்தி அறிவித்துள்ளாரே?*

! அடிப்படை வசதிகளையும் கட்டமைப்பையும் வலுப்படுத்தி, வேலை வாய்ப்புகளைப் பெருக்குவது ஒன்றுதான் ஒட்டுமொத்த சமூக-பொருளாதார சவால்களுக்குத் தீர்வு. இதுபோன்ற உரிமைச் சட்டங்கள் பாலுக்கு அழும் குழந்தைக்குக் கிலுகிலுப்பை காட்டும் நடவடிக்கையே. 'ஏவ்...'- மக்களின் அறியாமையை விருந்தாக்கி உண்ட அரசியல்வாதி விடும் ஏப்பத்தின் ஒலி கேட்கிறதா?

● இராம.வாணி, திருவாரூர்

*? ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை நிலம் வழங்கினால், சென்னையே சட்டசபை உறுப்பினர் குடியிருப்பாக மாறிவிடும். எனவே எம்.எல்.ஏக்களுக்கு நிலம் வழங்கும் அறிவிப்பை முதல்வர் திரும்பப் பெற வேண்டும்'' என்று பொன். ராதாகிருஷ்ணன் கூறியுள்ளாரே?*

! பொன்னான அறிவுரைதான். ஆனால், இன்று ரியல் எஸ்டேட் விற்கும்

நிலையில், மண்ணாசை யானது இந்தப் பொன்னான அறிவுரையை வென்றுவிடும்.

● என்.கோமதி, நெல்லை - 7 ★

? 'தமிழை வளர்ப்போம்' என்று பட்டி தொட்டியெல்லாம் முழங்கினாலும், செம்மொழி மாநாட்டின் குறுந்தகடு வெளியீட்டு விழாவில் பாடலைப் பாடியவுடன் 'ஒன்ஸ் மோர்' என்றுதானே கூவினார்கள்?

! தமிழுணர்ச்சியில் ஆங்கிலத் தாக்கம் பிணைந்து போயிருப்பதையே உணர்த்துகிறது. இதனைத் தமிழ் வளர்ச்சியின் ஓர் அம்சமாக ஏற்பதும், எடைபோட்டு ஆராய்வதும்கூட செம்மொழி மாநாட்டின் செயல் திட்டத்தில் இடம்பெறுவது நியாயம்.

● வாசுதேவன், மும்பை

? சமீபத்திய சொதப்பல்...?

! பெரும்பான்மை கேள்விகளுக்கு உப்புசப்பின்றிப் பட்டுக் கொள்ளாமல் பதில் அளித்த பிரதமரின் பிரெஸ் மீட்!

● கே.சண்முகம், ஆதமங்கலம்புதூர்

? கழைக்கூத்தாடிபோல் கயிற்றில் ஆடிக் கொண்டிருக்கும் நிலையில், ''ஐந்து ஆண்டுகள் நிச்சயம் ஆட்சி செய்வேன்'' என்கிறாரே சிபு ஸோரன்?

! பா.ஜ.க. கைவிட்டால் காங்கிரஸ் கை கொடுக்கும் என்ற நம்பிக்கையில் பேசுகிறார். பூனைகளுக்கு இடையில் குரங்கு மத்தியஸ்தம் செய்து, அப்பத்தை முற்றிலுமாக விழுங்கி விடவில்லையா? அப்படி ஜார்க்கண்டை தமதாக்கிக் கொள்ள நினைக்கிறார். பூனைகள் படிப்பினை பெற நதுதான் வியப்பு!

● எம்.மிக்கேல்ராஜ், சாத்து

? எம்.ஜி.ஆ. காலத்தில் கருணாநிதி யால் பத்து ஆண்டுகளுக்கு ஆட்சிக்கு வரமுடியவில்லை; ஆனாலும் மன உறுதியோடு இருந்தார். இன்று ஜெயலலிதாவிடம் அதை எதிர்பார்க்க முடியுமா

! மன உறுதியுடன் இருந்தால் மட்டும் போதாது; அத்துடன் பொறுமையும் ஆழ்ந்த சிந்தனையும் வியூகம் வகுக்கும் ஆற்றலும் தேவை. ஜெயலலிதாவுக்கு கருணாநிதி மீது உள்ள துவேஷமும் ஆத்திரமும் இவற்றை அமுக்கிவிட்டு மேலோங்குவதுதான் பிரச்னை.

● எம்.எஸ்.மணி, பெங்களூரு

? ''தமிழக அரசின் சின்னத்தை மாற்ற வேண்டும்'' எனக் கோரிக்கை வைப்பவர்களுக்கும் பாபர் மசூதியை இடித்தவர்களுக்கும் என்ன வித்தியாசம்?

! கோரிக்கை வைப்பவருக்கும் கோடாலியால் வெட்டுபவருக்கும் இடையே உள்ள வித்தியாசம்தான்!



★ பங்கிட்ட அப்பம்!

☐ ரூ.150/- பரிசு பெறுபவர் :
ச.நாராயணன், திருநெல்வேலி

★ ரூ.75/- பரிசு பெறுபவர் :
என்.கோமதி, திருநெல்வேலி




## சருமத்தைப் பாதுகாக்க சிறந்த வழி அதை ஆரோக்கியமாக வைத்துக் கொள்வதுதான்.

வழங்குகிறோம் பேர்ஸ் ஜெர்ம்ஷீல்டு. இது 99.9% கிருமிகள் வரை அகற்றும் இதமான க்ளென்சராகும். மேலும், இதன் க்ளீசரின் *ஃபார்முலா ஆற்றல்மிக்க மாய்ஸ்ச்சரைசேஷன் அளித்து, சருமத்தை 10 மடங்கு* சிறந்ததாக ஆக்குகிறது. ஆரோக்கியமான மாய்ஸ்ச்சரைஸ் செய்த சருமம், கிருமிகள் உடலுக்குள் புகாமல் தடுக்கும் ஓர் கேடயம் போன்றது.** எனவே, இன்னும் என்ன தயக்கம்? அவர்களின் சருமத்திற்கு ஈடுஇணையற்ற பாதுகாப்பை அளியுங்கள்.




www.masoompears.com

# அவர்களைப் போலவே அவர்களுடைய சருமமும் பரிசுத்தமாக இருக்கட்டும்.

ஃபுட்பால், கிரிக்கெட், வாங், சைக்கிள் ரைட், மணல் வீடு கண்ணாமூச்சி இதெல்லாம் கோடை காலத்தில் உங்கள் குழந்தைகளை பிசியாக வைக்கும் சில விஷயங்கள். ஆனால், இந்த விளையாட்டுகள் அனைத்திலும் பொதுவாக இருக்கும் ஓர் விஷயம் அவர்களை பாழாக்கும் ஒன்று. கிருமிகள். உங்கள் குழந்தைகள் நாள் முழுவது நன்றாக விளையாடி விட்டு வீட்டிற்குத் திரும்பும்போது நிச்சயம் கூடவே கொண்டு வருவது. அது உங்கள் குழந்தைகளுக்கு அதாவது அவர்கள் சருமத்திற்கு ஏதேனும் தீங்கு விளைவிக்குமா, விளைவிக்காதா என்பது நீங்கள் கையாள்வதைப் பொறுத்தது.



உங்கள் குழந்தையை தினமும் ஓர் ஆன்டிசெப்டிக் சோப்பால் குளிப்பாட்டினால் இந்தப் பிரச்சினையைத் தீர்க்கும் வாய்ப்பு உள்ளது. ஆனால், ஓர் ஆன்டிசெப்டிக் சோப் கிருமிகளை அழிக்கும்போது சருமத்தின் தளிர் தன்மையையும் சேர்த்து அழித்து விடும். சருமத்தின் அத்தியாவசிய விஷயங்கள் அனைத்தையும் பறித்து விடும். அதன் மென்மையையும்தான்! இதற்காக, உங்கள் குழந்தைகள் வெளியில் சென்று விளையாடி மகிழ்வதைத் தடுக்க முடியாது. பிறகு, என்னதான் செய்வீர்கள்? உங்களுக்குத் தேவை, கிருமிகளுக்கு எதிராக ஆற்றலுடன் செயல்புரியும் அதே சமயம் சருமத்தின் மீது கடுமை காட்டாத ஓர் சோப்.







புதினா சத்துக்களின் நற்குணங்களுடன் பேர்ஸ் ஜெர்ம்ஷீல்டு 99.9% கிருமிகளை அகற்றுவதுடன் சருமத்திற்கு 10 மடங்கு* சிறந்தது. மேலும், ஹ்யூமெக்டன்ட்ஸ் சருமத்தை நன்கு மாய்ஸ்ச்சரைஸ் செய்து அதை மென்மையாக பரிசுத்தமானதாக ஆக்கும்.

**பேர்ஸ் ஜெர்ம்ஷீல்டு உங்கள் குழந்தையின் சருமம் ஆரோக்கியமாவதற்கு உதவி செய்து கிருமிகளுக்கு கேடயம் போன்ற பாதுகாப்பை அளிக்கும். இது சருமத்தை மாய்ஸ்ச்சரைஸ் செய்வதன் மூலம் அதை நீண்ட காலம் பாதுகாப்பாக வைக்கும்.**

உங்கள் குழந்தையின் சருமத்திற்குத் தேவை, பாதுகாப்பை எவ்வளவு சுலபமான வழியில் அளிக்கலாம் என்பது உங்களுக்கு இப்போது தெரிந்திருக்கும். உங்கள் குழந்தைகளும் கிருமிகளைப் பற்றிக் கவலைப்படாமல் கோடை விடுமுறையை இனிதே கழிக்கட்டும். நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் பேர்ஸ் ஜெர்ம்ஷீல்டை மறக்காமல் பயன்படுத்த வேண்டியதுதான். நீங்கள் குழந்தைகளை பராமரிப்பது போல், பேர்ஸ் ஜெர்ம்ஷீல்டு உங்கள் குழந்தைகளை பராமரிக்கும். மிக இதமாக. ஆனால் தேவைப்படும் இடத்தில் கடினமாக. எல்லாம் எதற்காக? கிருமிகளுக்கு பாடம் புகட்டும்போது சருமத்தை தண்டிக்கக் கூடாது, அல்லவா?

*இது சரும நன்மைகள் மற்றும் மாய்ஸ்ச்சரைசர்களின் நிலைகளைப் பொறுத்தது.

www.mascompears.com

# குளியல் ரகசியம்!

''உங்க கிராமங்களில் என்ன சொல்றாங்களோ தெரியாது. எங்களுக்கு சனி நீராடுன்னு ஒரு சொலவடை உண்டு. சனி நீராடலேன்னா உடம்பை சனியன் பிடிச்சிருப்பாரு. அப்புறம் காலம் முழுக்க கஷ்டம்தான். சனி நீராடுன்னா... மற்ற நாள் எப்படியோ, ஆனா சனிக்கிழமை எண்ணெய் தேய்ச்சிக் குளின்னுதான் உத்தரவு. இது நம்ம பெரியவங்க சொன்னதுங்க. நூறு மில்லி நல்லெண்ணெய் வாங்கி அதில பூண்டு, மிளகு, சீரகம் போட்டுக் காய்ச்சி ஆற வைத்து, உடம்பு முழுக்கப் பூசி அரை மணி நேரம் ஊற வெச்சி, மசாஜ் செய்து தொப்புன்னு குளத்துல குதிச்சி, எந்திரிச்சா, அந்த யமன் கூட 'துண்டக் காணோம் துணியக் காணோம்னு' ஓடிடுவான். உடம்பு வலி, வயிற்றுவலி, தலைவலி விட்டைக் காலி பண்ணிட்டு ஓடும். கிட்ட அண்டாது'' என்று நெல்லை வெங்கடேசன் சொன்னது சரியான்னு அரசு சித்த மருத்துவ நிபுணர் இராமலக்ஷ்மியைக் கேட்டோம்.

''பஞ்சபூதங்களான நம் உடலிலுள்ள வாத, பித்த, கபத்தை தன்னிலைப்படுத்த சித்தர்கள் சொன்ன வழிகளில் ஒன்று எண்ணெய்க் குளியல். இரத்த ஓட்டத்தை அதிகப்படுத்தி, தோல் வறட்சி நீங்கி இசுக்கள் புத்துணர்வு பெற, எண்ணெய்க் குளியல் ரொம்ப அவசியம். வாதம், பித்தம், கபம் இயல்பு நிலையில் இருக்க வைக்கவே இந்த சூட்சுமம். இதனால் உடல் லேசாகி மனம் அமைதியடையும். ஆண்கள் புதன், சனியிலும், பெண்கள் வெள்ளியிலும் எண்ணெய் தேய்த்துக் குளிக்கலாம். அன்று அசைவ உணவும் பகல்



* இராமலக்ஷ்மி



உறக்கமும் கூடவே கூடாது. இளமைத் தன்மை தொடர்ந்து நீடிக்க, எண்ணெய்க் குளியல் உறுதுணை புரியும். அரிதாகிவிட்ட இந்தப் பழக்கம், நாகரீக, பரப்பரப்பான வாழக்கைக்குத்தான் ரொம்பத் தேவை. ஆமாங்க, டென்ஷனை இது குறைச்சிடும். நம்ம முன்னோர்கள் முட்டாள்கள் இல்லீங்க'' என்றார் 'நச்'சென்று.

செய்தி சித்திரம்:

**சினி லோக், நெல்லை**

# திமிர்தான்

**கிரேஸி மோகனுடன் கைகோத்து திரைக்கதை, இயக்கம் மூலம் முழு நீள நகைச்சுவைப்படமான 'கொல கொலயா முந்திரிக்கா'வைத் தந்திருக்கிறார் கோலிவுட் இயக்குநர் மதுமிதா. தமிழகம் முழுவதும் முதல்நாள் வசூலாகும் பணத்தை கேன்ஸர் இன்ஸ்ட்டிட்யூட்டுக்குத் தரவிருப்பதாக அறிவித்ததை நல்ல துவக்கமாக வரவேற்று, அவரைச் சந்தித்துக் கேட்ட கேள்விகளும், அவரின் 'நச்' பதில்களும்...**

**அயல் தேசத்தில் சினிமாவை முறையாகப் படித்து விட்டு, 'வல்லமை தாராயோ' படத்தின்மூலம் இயக்குநராக நிரூபித்த பின்னரும், விருதுக்குரிய படத்தில் கவனம் குவிக்காது, ஏன் இந்தக் காமெடிப் படம்?**

**நடிகையின் பேச்சால் ஒரு சமூகம் தலைகீழாக மாறிவிடாது. கலாசாரக் கோளாறிலும் சிக்காது.**

பிறரின் எதிர்பார்ப்புக்குப் பொருந்துவது அல்லது பிறரின் வரையறைக்குள் வசப்படுவது எனக்கு உடன்பாடில்லை. அதைவிட முக்கியம், காமெடிப் படம் எடுப்பது கஷ்டமானது. அதையும் நிரூபிக்கத்தான் இந்த முயற்சி. காமெடிப் படத்துக்கும் ஆஸ்கர் பரிசு கிடைக்கும். அதன் வரையறை இங்கு பலருக்குத் தெரிவதில்லை. அடுத்து ஆக்ஷன் படம்தான்.

**ஆஸ்கர் விருது பெற கமலோடு போட்டியா? ரஹ்மானுக்கு அடுத்த இடத்தைப் பிடிக்கத் திட்டமா?**

கமல்ஜியின் ரசிகை நான். அவர் தமது நடிப்பிற்கு ஆஸ்கர் முயற்சியில்; நான் ஒரு தமிழ்ப் படத்துக்கு ஆஸ்கர் பெறும் முயற்சியில். இதில் போட்டி எங்கே? ரஹ்மான் இந்தியச் சூழலில் அங்கீகாரம் பெற்றவர். என் கவனம் தமிழ்த் திரைப்படத்தைக் குறிவைத்து.

**உங்களுக்குப் பிடிக்காத உங்கள் பலம் எது? பிடித்த உங்கள் பலவீனம் எது?**

பிடிக்காத பலம் - திமிர். ஆனாலும், திரையுலகில் ஜெயிக்க எனது திமிர்தான் பலம். பிடித்த பலவீனம் - என் உறவினர்களின் விமர்சனத்தை என்னால் சகிக்க முடியாது. (வேறு யார் வேண்டுமானாலும் விமர்சிக்கலாம்; சகித்துக் கொள்வேன்)

**கோலிவுட் எப்படியிருக்கிறது? ஒரு பெண் இயக்குனர் இங்கு நிலவும் ஆணாதிக்கச் சூழலில் வெற்றியைப் பதிப்பது கடினம்தானே?**

கோலிவுட்டில் உண்மையற்ற, யாரையும் நம்பாத சூழல் நிலவுகிறது. நெருங்கிய நண்பர்கள் என்பார்கள்... ஒருவர் எடுக்கும் படத்தின் கதை

# பலம்!

## மதுமிதா பேட்டி

யென்ன, க்ளைமாக்ஸ் என்ன என்பது இன்னொருவருக்குத் தெரியாது. இங்கு சுரங்கம் மாதிரி திறமை தனக்குள் இல்லாததால், கதைத் திருட்டுப் பயம் சூழலைக் கவ்வியபடியிருக்கிறது. என்னுடைய அப்பா, தம்பி, கணவர், மாமா என்ற நான்கு ஆண்களின் பாதுகாப்பு வளையத்தில் எனக்கான என் வெற்றியைப் பறிக்கிறேன்.

**நடிகர்/நடிகை அரசியலுக்கு வருவது? மாறி வரும் கலாசார மாற்றம்? சினிமாக்காரர்களின் பொறுப்பற்ற பேச்சு - இதுபற்றி உங்களிடம் கருத்து உள்ளதா?**

அரசியல் எனக்குப் பிடிக்காது. அரசியலில் ஈடுபடுவது அவரவர் விருப்பம். எதில் ஈடுபட்டாலும், அதில் உண்மையும் ஆத்ம ஈடுபாடும் வேணும். கலாசார மாற்றம் சுனாமி மாதிரி வந்தாலும் அது நிரந்தரமானதல்ல. ஒரு நடிகர்/நடிகையின் பேச்சால் ஒரு சமூகம் தலைகீழாக மாறிவிடாது, கலாச்சாரக் கோளாறிலும் சிக்காது என்று நம்புகிறேன்.

**சமீபத்தில் வாசித்த புத்தகம்...?**

அமெரிக்க எழுத்தாளர் Dean Koontz எழுதிய புத்தகம்.

**ரோல் மாடல் யார்? இலக்கை அடைய உங்கள் யுக்தி எது?**

ரோல் மாடல் யாருமில்லை. ஓடும்போது எனக்கு வலப்பக்கமும் இடப்பக்கமும் ஓடுபவர்களைக் கவனிப்பது இல்லை. என் இலக்கு மட்டும்தான் குறி. இது கூட நம் மரபு சொல்லித் தந்ததுதான்.

**- சூர்யா**



இந்திய ஜனநாயகக் கட்சி என்ற பெயரில், புதிய இயக்கத்தைத் தொடங்கியிருக்கிறார் எஸ்.ஆர்.எம். கல்வி நிறுவனங்களின் நிறுவனர் டாக்டர் பச்சமுத்து. திருச்சியில் மாநாட்டோடு துவக்கப்பட்டிருக்கும் கட்சியை ''மற்றுமொரு ஜாதிக் கட்சி'' என்ற முத்திரையைக் குத்துகிறார்கள் அரசியல் நோக்கர்கள். பார்க்கவ குலம் என்கிற உடையார் வகுப்பைச் சார்ந்த பச்சமுத்து, தமது வகுப்பினரை ஒன்று திரட்டி அதன் மூலமாக அரசியல் லாபம் அடையவே, பொதுவான பெயரில் இந்தக் கட்சியைத் துவக்கியிருக்கிறார் என்பது குற்றச்சாட்டு.

தமிழ்நாட்டு அரசியலுக்கு சாதிப் பின்னணி என்பது புதிய விஷயமல்ல. அந்த வகையில், முன்னணிக் கட்சிகள் கூட, தொகுதிகளில் வேட்பாளர்களைப் போடும் போது பெரும்பான்மை ஜாதியைச் சேர்ந்தவர்களையே போடுகிறார்கள். ஆனால், இந்தக் கண்ணோட்டத்தை உடைத்தெறிந்தவர் எம்.ஜி.ஆர்.

''சாதிகளை வென்றெடுத்து சமூகத்தில் சமநிலை காணவேண்டுமென்பது நமது லட்சியமாக இருக்கும் பட்சத்தில், சாதிப் பின்னணியோடு கட்சி துவங்குவது மக்களை இன்னமும் பிளவு படுத்துவது போலாகாதா? தவிர, இந்தக் கட்சி குறிப்பிட்ட ஜாதி பலத்தோடு இருக்கிறது என்பது வெளிப்படையாகத் தெரியும் போது, மற்ற பிரிவினர் ஆதரவு அதற்கு எப்படிக் கிடைக்கும்?'' இந்தக் கேள்விகளை டாக்டர் பச்சமுத்துவிடம் வைத்தோம்.

''குறிப்பிட்ட சாதியில் நான் பிறந்தேனே தவிர, என்னுடைய உழைப்பால் தான் இந்த அளவுக்கு உயர்ந்திருக்கிறேன். இந்த நிலையில் நான் பிறந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள் எனக்கு பாராட்டு விழா நடத்தினார்கள். அவ்வளவு தான். ஒரு ஜாதி சங்கத்தை நான் கட்சியாக மாற்றவில்லை. ஏற்கெனவே 'பாரி நற்பணி மன்றம்' என்ற பெயரில் மக்கள் நலப்பணிகளைச் செய்து வருகிறேன். அதில் எல்லாப் பிரிவினரும் இருக்கிறார்கள். அந்த அடிப்படையில் புதிய கட்சியைத் துவங்கியிருக்கிறோம். ஒரு கல்வியாளன் என்ற முறையில் நான் ஜாதி வட்டங்களுக்கு அப்பாற்பட்டவன். சமூகத்தின் எல்லா பிரிவினரும் என் நிறுவனங்களில் படித்துக் கொண்டிருக்கிறார்கள். அந்த இளைஞர்களின் நாடித் துடிப்பு எனக்குத் தெரியும். இதுவரை வாழ்க்கையில் நேர்மையை கடைபிடித்து வந்திருக்கிறேன். இனியும் கடைபிடிப்பேன்.



* பச்சமுத்து

புதிய

இளைஞர்களின் கனவுகளை நிறைவேற்ற எங்கள் கட்சி பாடுபடும். அறிஞர் அண்ணா செங்குந்த முதலியார் மாநாட்டில் பேசினார் என்ற ஒரே காரணத்துக்காக தி.மு.க.வை ஒரு சமூகத்துக்குள் முடக்கி விடுவீர்களா? தேர்தலில் கொள்கை அடிப்படையில் நாங்கள் யாரோடும் கூட்டணி சேர முடியாது. வேண்டுமானால் தேர்தல் உடன்பாடு வைத்துக் கொள்வோம்'' என்கிறார் பச்சமுத்து.

**"டாக்டர் ராமதாஸ் மீண்டும் வன்னியச் சங்கமாக மாற்ற முயன்றதால்தான் நான் வெளியேறினேன்"**



* பண்ருட்டி ராமச்சந்திரன்

''ஜாதி சங்கங்கள் அரசியல் முகமூடியால் தனித்து நின்று வென்றதாகச் சரித்திரமே கிடையாது. 2001 தேர்தலில் பல ஜாதி அரசியல் கட்சிகளைச் சேர்த்து, கூட்டணி அமைத்த கருணாநிதி தோல்வியுற்றார்,'' என்கிறார் 'கருத்துக்களம்' ஆசிரியர் தங்கதுரை.

**செ**ன்ற பாராளுமன்றத் தேர்தலின் போது பரபரப்பாக அறிமுகமானது கொங்கு நாடு முன்னேற்றக் கழகம். கொங்கு வேளாளர் பேரவை என்ற கவுண்டர் சமூகத்துக்கான அரசியல் அமைப்புதான் அது.

''எந்த ஓர் இயக்கத்தின் துவக்கத்துக்கும் காரணம் மற்றொரு சிறு அமைப்பாகத்தான் இருக்க முடியும். இன்றைய திராவிட இயக்கங்களின் துவக்கம் 'பிராமணரல்லாதோர் இயக்கம்' தானே? அதில் ஜாதி அடிப்படை இல்லையா? நாங்கள் கரும்புக்குக் கூடுதல் விலை கொடு என்று போராட்டம் நடத்துகிறோம். இதில் பொது நோக்கம் தானே இருக்கிறது. இன்னமும் சொல்லப்போனால் இது போன்ற கட்சிகள் மூலம் சமூக நல்லிணக்கம் பலப்படும் என்பதுதான் சரி,'' என்கிறார் கொ.மு.க.வின் தலைவர் ஈஸ்வரன்.

# ஜாதி கட்சி?



* ஈஸ்வரன்

வன்னியர் சங்கத்தை இன்னமும் பரந்த அளவில் பொதுவான கட்சியாக மாற்ற உந்துசக்தியாக இருந்தவர் பண்ருட்டி ராமச்சந்திரன்.

''ஆனால் டாக்டர் ராமதாஸ் மீண்டும் அதை வன்னியச் சங்கமாக மாற்ற முயன்றதால்தான் நான் பா.ம.க.விலிருந்து விலகினேன்'' என்கிறார் பண்ருட்டி. பென்னாகரம் தேர்தலுக்குப் பின் மீண்டும் வன்னியர் சங்கத்தை வலுப்படுத்தும் வேலையில் இறங்கியிருக்கிறார் ராமதாஸ்.

இந்த அரசியல் சூழலில் ஜாதி ரீதியான கணக்கெடுப்பு என்று குரல் வேறு கேட்கிறது!

**- ப்ரியன்**



# கல்கி




2010 ஜூன் 6
விக்ருதி வைகாசி 23
மலர் : 68
இதழ் : 45


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## மறு அவதாரம் எடுப்பாரா மன்மோகன் சிங்?

நமது நாட்டு சட்டமன்றங்களில் கவர்னர் உரை நிகழ்த்துவது போல், பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தில் அரசி உரையாற்றுவது மரபு. தற்போதைய பிரிட்டிஷ் அரசின் முதல் நாடாளுமன்ற அமர்வில் அரசி இரண்டாம் எலிஸெபத் ஆற்றிய உரையில், ''பட்ஜெட் பற்றாக்குறையைக் குறைப்பதும் அதன் மூலம் பொருளாதார வளர்ச்சிக்கு உந்துதல் தருவதும்தான் இவ்வரசின் முதன்மைத் திட்டம்'' என்று பேசியிருக்கிறார்! அரசு செலவினங்கள் 8.9 பில்லியன் டாலர் (மில்லியன் அல்ல) அளவுக்குக் குறைக்கப்படும்; அரசு உயர்பணிகளுக்கு ஆள் சேர்ப்பு நிறுத்தி வைக்கப்படும்; எம்.பி.க்கள் எண்ணிக்கையைக் குறைக்கும் வகையில் தொகுதி மறுசீரமைப்பு நடைபெறும்; பத்து சதவிகித வாக்காளர்கள் கையொப்பமிட்டால், ஓர் எம்.பி.யின் பதவியை ரத்து செய்யும் வகையில் சட்டத்திருத்தம் கொண்டுவரப்படும்'' - இவை அரசி அறிவித்த திட்டங்களில் சில.

இத்தகைய சீரிய முடிவுகளை நமது அரசும் எடுத்து அறிவிப்பதுடன், செயல்படுத்தவும் ஆரம்பிக்கிறபோதுதான் இந்தியா முன்னேற முடியும். ஆனால், இதுபோன்ற துணிச்சலான முடிவுகளை நமது பிரதமரால் எடுக்க இயலவில்லை. அதனால்தான் அவர் தமது அரசின் ஓராண்டு ஆட்சிக்கால இறுதியில் நடத்திய பத்திரிகையாளர் கூட்டம் அழுது வடிந்தது!

ஓராண்டுக்குள் அற்புதங்களை எந்த அரசாலும் நிகழ்த்த முடியாது என வாதாடலாம். எனினும், இன்று ஆட்சியில் உள்ள

நம்ம பையனுக்குத் தரேன்னு முன்னமே சொல்லியிருக்கீங்க... ஞாபகமிருக்கில்லே...
ராஜ்ய சபை எம்.பி.பதவிகள்
யப்பா! யப்பா... எல்லாத்தையும் எங்க கைலயே குடுத்துடு...
ஹைய்யா! நம்ம பாடு ஜாலி!
எனக்கு இன்னொண்ணு குடு மாமா...
காங்கிரஸ்
தி.மு.க




யு.பி.ஏ. அரசுதான் கடந்த நாடாளுமன்றத் தேர்தலிலும் ஜெயித்து ஆட்சி அமைத்தது. அந்த ஐந்தாண்டு ஆட்சியின் நீட்டிப்பாகவே கடந்த ஓராண்டைப் பார்ப்பது நியாயம்தான்.

இந்த ஓராண்டில், விலைவாசி உயர்வு வாட்டி எடுத்திருக்கிறது; விவசாயிகள் தற்கொலை குறையவில்லை; ஏழை - எளிய மக்களின் வாழ்க்கைத் தரம் உயரவில்லை; பள்ளிக் குழந்தைகள் படிப்பைப் பாதியில் விட்டு வெளியேறுவது நிற்கவில்லை; விவசாயிகள் தங்கள் தொழிலை நம்புவதற்கியலாமல் நகரங்களுக்குக் குடிபெயர்வது தொடர்கதையாகியிருக்கிறது; கைத்தொழில்கள் நலிகின்றன; உற்பத்தித் தொழில்கள் மின் தட்டுப்பாடு சூழலில் நொண்டிக் கொண்டிருக்கின்றன; பட்ஜெட் பற்றாக்குறை பெருகுகிறது; அரசு செலவினங்கள் சிறிதும் குறையவில்லை.

தலைப்புச் செய்திகளாகக் கடந்த ஆண்டில் என்னதான் கண்டோம் என்று பார்த்தால்...

* நீதிபதி தினகரன் விவகாரம் - அதில் முடிவெடுக்காமல் அரசு காலம் கடத்திய அநீதி. * ஸ்பெக்ட்ரம் ஊழல் - அது நடக்கவில்லை என்று சப்பைக்கட்டு கட்ட அமைச்சர் ராஜா அனுமதிக்கப்படும் அவலம். * சசி தரூர், ஜெய்ராம் ரமேஷ், அழகிரி போன்றோரின் பேச்சு / நடத்தையினால் அமைச்சரவையின் கௌரவத்துக்கு ஏற்பட்டுள்ள இழப்பு. * பெருகும் அயல்நாட்டு பயங்கரவாதத்தின் பிடியில் இருந்தும், அஃப்ஸல் குருவின் தண்டனையைக் குறித்து முடிவெடுக்கத் தயக்கம். * மாவோ - நாக்ஸல் இயக்கத்தினரின் வன்முறைக்கு அப்பாவி உயிர்கள் பலியாகும் சோகம்! * சில எதிர்க் கட்சிகளின் தயவினால் அரசு வெட்டுத் தீர்மானத்தில் தப்பிப் பிழைத்த நாடகம்!

அனைத்து வகைகளிலுமே இது கையாலாகாத அரசு என்பதைக் காட்ட, இன்னும் என்ன வேண்டும்?! வோட்டுகளை மனத்தில் கொண்டு செயல்படுவதை நிறுத்திவிட்டு, நாட்டையும் மக்களையும் உத்தேசித்து, தைரியமாக முன்னேற்ற முடிவுகளை எடுக்கப் பிரதமர் முன்வருவாரா? 1990-களின் மன்மோகன் சிங்காக மறு அவதாரம் எடுப்பாரா?

## கண்டுபிடிச்சேன்... கண்டுபிடிச்சேன்...

# செந்தமிழ்ப் போட்டி

## ஆரம்பம்!

### கண்ணாமூச்சி ஆடிய பழக்கம் உண்டா? அதையே கொஞ்சம் மாத்தி ஆடுவோமா?






ஒரு பிரபல தமிழ்ப் பாடலின் ஒற்றை ஒரு வரியைத் தேர்வு செய்திருக்கிறோம். அந்த வரியிலிருக்கும் சொற்கள் இந்த வாரம் தொடங்கி நான்கு வாரங்கள் (27.6.10 இதழ் முடிய) கல்கியில் இடம் பெறும் தலைப்புகளில் கலந்து இடம் பெறும். குறிப்புகளைக் கொண்டு ஒவ்வொரு வாரமும் அந்தச் சொற்களைக் கண்டுபிடித்துச் சரியாக வரிசைப்படுத்தி அந்தப் பாடல் வரியைக் கண்டுபிடிக்க வேண்டும். ஒட்டுமொத்தமாகச் சேர்த்து வைத்து நான்காவது வாரம் நாங்கள் தேர்வு செய்து வைத்திருக்கும் அந்தப் பாடல் வரியையும், அதை எழுதியவரின் பெயரையும் குறிப்பிட்டு, உங்கள் புகைப்படத்தோடு சுயமுகவரியுடன் அனுப்பி வைக்க வேண்டும்/சரியான விடை எழுதிய 5 நபர்களுக்கு (குலுக்கல் முறையில் தேர்வு செய்து) பரிசு அளிக்கப்படும். வெற்றி பெற்றவர்களைப் புகைப்படத்தோடு அறிவிப்போம். கூடுதலாக, நான்காவது வாரம் இடம் பெறும் படைப்புத்திறன் போட்டியிலும் பங்கேற்று வெற்றி பெறும் ஒரு நபருக்கு லேப் டாப் பரிசு!

ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

**இந்த வார குறிப்புகள் :**

1. **ஆள்காட்டிவிரல் போல ஆட்சி செய்யும் சொல்!**
2. **காய்கறிக்குச் சுவை சேர்த்துக் கொண்டிருக்கிறது!**

# தமிழிற்கும்–கந்த புராணத்திற்கும் ஓர் உச்சித் திலகம்...

# கவிஞர் வாலியின் புதுமைப் படைப்பு...

ஒரு நூலாசிரியரின் கையெழுத்திலேயே வெளிவரும் **முதல் முழு நூல்**

விலை : **ரூ.500/-**

ஓவியர் **சில்பியின்** ஏராளமான படங்களுடன்



கவிஞர் வாலியின் தமிழ்க் கடவுள் –
கற்றவர்களுக்குப் பிடிக்கும்...!
கடவுள் பக்தி உள்ளவர்களை –
கண்ணீரால் நனைக்கும்...!
அறிஞர் உலகுக்கு வியப்பாய் விரியும்...!

– முனைவர் இரா.செல்வக்கணபதி



தமிழ்க் கடவுள்

கவிஞர் வாலி

கந்த புராணம் – புதுக் கவிதையில்






அல்லயன்ஸ்,

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)
(ப.எண்) 244, ராமகிருஷ்ணா மடம் சாலை, மைலாப்பூர், சென்னை-4
தொலைபேசி: 24641314 www.alliancebook.com
email: srinivasan@alliancebook.com

**சேனல்**

''சினிமாவுக்குப் பதிலாக மாற்று மீடியா கிடையாது. சினிமாவுக்கு மாற்றாக எதுவும் இருக்க முடியாது. அந்த சினிமாவில் சாதிக்க விரும்பும் .இளைஞர்களின் திறமையை வெளிச்சத்திற்குக் கொண்டு வருவதே நாளைய இயக்குநர் என்ற நிகழ்ச்சியின் நோக்கம்'' என்று உறுதியாகக் கூறுகிறார் பிரதாப் போத்தன்.

வெற்றிகரமாக, புதிய முயற்சியாய் கலைஞர் டி.வி.யில் நடக்கும் நாளைய இயக்குநர்கள் நிகழ்ச்சியின் நடுவர்களில் ஒருவர் பிரதாப் போத்தன். ''நேஷனல் பனோரமா உட்பட பல்வேறு சினிமா நிகழ்ச்சிகளுக்கு நான் நடுவராகச் சென்றிருந்தாலும், நாளைய இயக்குநர் நிகழ்ச்சியின் களம் முற்றிலும் வேறுபட்டது. சினிமாக் கனவுகளைக் கண்களிலும் சாதிக்கும் முயற்சியைச் செயலிலும் கொண்டிருக்கும் இளைஞர்களின் குறும்படப் படைப்புகளை விமர்சிப்பதால், மிக வும் பொறுப்புடனும், கவனத்துடனும் செயல்பட வேண்டியுள்ளது.

இது தமிழ்ச் சினிமா இண்டஸ்ட்ரிக்கு அட்வைஸ் செய்யும் நிகழ்ச்சி அல்ல படைப்பாளிகள் தாங்கள் என்ன உண கிறார்களோ அதைத்தான் சினிமாவில் செய்ய முடியும். அரைத்த மாவையே எ தனை நாளைக்கு அரைப்பது? புது சி தனை கொண்டவர்கள், கோடம்பாக்கத்தில் நிறையப் பேர் இருக்கிறார்கள் என்பதை சொல்லும் வாய்ப்புதான் 'நாளைய இயக்குநர்'.

என்னுடைய ஃபேஸ்புக், எனக்கு வரும் கடிதங்கள், நான் சந்திக்குப்

**பெண்களுக்குத்தான் டைரக்‌ஷன் அறிவு அதிகம்**



னிதர்கள் எனப் பலர் இந்த நிகழ்ச்சி யைப் பற்றி என்னிடம் பகிர்ந்துகொள் கிறார்கள். ஆரம்பத்தில், படித்த மக்களி டையே வரவேற்பைப் பெற்ற 'நாளைய இயக்குநர்' தற்சமயம் கிராமங்களிலும் விரும்பிப் பார்க்கப்படுகிறது. இது தமிழ்ச் சூழலுக்கு நல்ல ஆரம்பம்.

ஃபேன்டஸி, திகில், காதல் எனப் பல் வேறு விஷயங்களை ஐந்து நிமிடங்களில் சிறப்பாகத் தருகிறார்கள் நாளைய இயக்கு நர்கள். இக் குறும்படங்களில் இயக்குநர் களை மட்டுமல்லாது, சிறந்த நடிகர்-நடிகைகளையும் அடையாளம் காண முடி கிறது. இந்த நிகழ்ச்சியில் பங்குபெற்ற பாலாஜி, கார்த்திக் சுபாராஜ் போன்ற நாளைய இயக்குநர்கள் பிரபல திரைப் படத் தயாரிப்பாளர்களை ஈர்த்துள்ளனர். இவர்கள் எதிர்காலத்தில் தமிழ் சினிமா வில் பிரகாசிக்க இந்த நிகழ்ச்சி நுழை வாயிலாக இருக்கும்.

ஒரே வருத்தம், நாளைய இயக்குநர் நிகழ்ச்சியில் பெண்கள் பெரிய அளவில் இடம்பெறாததுதான். டைரக்ஷன் பற்றிய அறிவு பெண்களிடம்தான் அதிக அளவில் இருக்கும் என்பது என் கருத்து. அதற்கான சூழல்தான் அமையவில்லை. எதிர்காலத் தில் பெண்களின் பங்களிப்பு கணிசமான அளவில் இருக்கும் என்று எதிர்பார்க் கிறேன்'' என்றார் பிரதாப் போத்தன்.

இன்றைய சினிமா சூழல் பற்றி மதன் என்ன நினைக்கிறார்? குறும்பட இயக்கம் வளருமா? சினிமா மாற்றத்துக்கு வழிவகுக்குமா?

''நம்ம ஊரில் குறும்படங் களைப் பற்றி இப்பத்தான் புரிய ஆரம்பிச்சிருக்கு. ஆனால், ஐரோப்பிய நாடுகளில் குறும்படங்களுக் கென்றே தனியான நூலகங்களே இருக்கின் றன. அதிக அளவில் குறும்படங்கள் தயா ரிக்கப்படும் போது நாமும் அதை நோக்கி நகரலாம். அதுபோன்ற நூலகங்கள் இங் கேயும் வரலாம்.

எந்த ஒரு படைப்பாளிக்கும், முறை யான பயிற்சி தேவை. 'நாளைய இயக்கு னர்' போன்ற நிகழ்ச்சிகள் படைப்பாளியை நன்றாக மெருகேற்றும் வாய்ப்புக் கிடைத் தால் சினிமாவுக்கான எழுத்தாளர்களை யும் உருவாக்கலாம்.

டிஆர்பி ரேட்டிங் என்ற ஒற்றை விஷயத்தைச் சுற்றியே இன்று எல்லா




டீ.வி. நிகழ்ச்சிகளும் இடம்பெறுவதால், சினிமாவின் முக்கியத்துவத்தை மற்ற கலைகள் பெற முடியாமல் போகிறது. அதுவும் ஒருவகையில் ஆரோக்கியம்தான். சினிமா தொடர்பான நிகழ்ச்சிகள் அதிக மாக விரும்பிப் பார்க்கப் படுவதால், அதில் கொஞ்சம் ஆக்கப்பூர்வமாய் நாளைய இயக்குநர் போன்ற நிகழ்ச்சிகள் இடம்பெறுகின்றன. இது பொழுதுபோக்கு நிகழ்ச்சி கிடையாது. அறிவுபூர்வமான நிகழ்ச்சி'' என்றார் மதன்.

- ராகவ்குமார்

# ஐஸ் அவதாரம்!



**ச**ம்மர் லீவுல... காலேஜ் கதவடைப்புக்குப் பின், 'ஜில் விஸிட்' இல்லாததால், ஆரோக்யமான அறிதல் விஸிட்டுக்கு ஆயத்தமானோம். தொழிலாளர்கள் அதிகம் தேவைப்படாத, கோவையிலுள்ள நஹார் ஐஸ் தொழிற்சாலைக்கு வெயிலைச் சமாளிக்கும் யுக்தியாய் உள்ளே போனோம். நான்கு கட்டங்களாய் பச்சத் தண்ணீர் பனிக்கட்டியாய் அவதாரம் பெறும் காட்சிகள்...

1. கார்ப்பரேஷனிலிருந்து வரும் சிறுவாணித் தண்ணீரைச் சேமிப்புத் தொட்டியில் நிரப்புதல். 2. சேமித்த தண்ணீரை வடிகட்டிச் சுத்தமாக்குதல்.

3. ஒரேன் உதவியுடன் ice storage box-ல் நல்ல நீரை நிரப்பி, விசேஷ அறையில் இறக்குதல். 4. அறையினுள் அம்மோனியா வாயு... குழாய்கள் மூலம் செலுத்தப்பட்டு மூன்று நாள் இயந்திரம் ஓடிக் கொண்டிருந்தால், மைனஸ் பத்து டிகிரி சென்டிகிரேடில் ஒரு பெட்டி ஐஸ் கட்டி தயார்.

... இப்படியாக இந்த வெயிலில் ஐஸ் அவதாரம் எடுத்தாலும் வீட்டுக்கு வீடு ஃப்ரிட்ஜ் இருப்பதால் இந்தத் தொழில் படுத்துடுச்சாம்.

- ஆர்.பாலா





# ஸ்ரீ காயத்ரிமந்த்ராலயம்

080 - 32515438 (04322 - 270346)

23-வது வருஷ ஸ்ரீ காயத்ரி மஹாயக்ஞ மஹோத்ஸவப் பத்திரிகை

**"லோகா ஸமஸ்தா ஸுகினோ பவந்து"**

அன்புடையீர்,

நிகழும் விக்ருதி வருஷம் ஆடி மாதம் 26 முதல் 30 வரை (11.8.2010 முதல் 15.8.2010) ஆகிய நாட்களில் ஸ்ரீ காயத்ரி மந்த்ராலயத்தில் எழுந்தருளி அருள்பாலித்துக் கொண்டிருக்கும் வேதமாதா ஸ்ரீ காயத்ரி தேவிக்கு லக்ஷார்ச்சனை/ ஸ்ரீ காயத்ரி மஹா யக்ஞம், லோக க்ஷேமத்தை உத்தேசித்து ஸ்ரீ தேவியின் அருளால் விசேஷமாக நடத்தப்பட உள்ளது.

இதனால் அன்பர்களுக்கு மஹாபய நிவிர்த்தி, நவக்ரஹசாந்தி, ஸகல தோஷ நிவிர்த்தி, ஆச்ரித வித்யா பராப்தி, மற்றும் ஸன்மார்க்கத்தினால் உண்டான ஸகல நன்மைகளும் ஏற்படுகின்றது.

இதைக் கண்ணுறும் அன்பர்கள் தங்களால் இயன்ற நன்கொடைகளை அளித்து வேதமாதா ஸ்ரீ காயத்ரி தேவியின் க்ருபாகடாக்ஷத்திற்கு பாத்திரர்களாகும்படி வேண்டிக் கொள்கிறேன்.

**(வேதமாதா ஸ்ரீகாயத்ரி தேவியின் அருள்படி)**
**வி.பாலசுப்ரமணிய சர்மா, எண்.32, 8வது தெரு, ராம்நகர், புதுக்கோட்டை - 622004**





*பேருந்தில் ஏறியவுடன் என்னைப் பார்த்த இளைஞன், ஜன்னல் வழியே முகம் திருப்பிக் கொண்டான். சுடிதார் மாணவி தன் கையிலிருந்த புத்தகத்தை அவசரமாகத் திறந்து அதில் முகம் புதைத்துக் கொண்டான். நடுத்தர வயதுப் பெண்மணி, பார்த்து விட்டும் பார்க்காதது போல் நடித்தாள். அலுவலகம் செல்லும் ஐம்பது வயதுள்ள நபரோ தூங்குவது போல் பாவனை செய்தார்.*

*பாவம், அவர்களுக்கு எப்படித் தெரியும்? இடுப்பில் அழும் குழந்தை இருந்தாலும், மனமில்லா மனிதர்களிடம் உட்கார இடம் கேட்க மாட்டேன் என்று!*

● **பனிமலர்**

• நா.நாகராஜன் •

**எ**ட்டு மாதக் கனவு நிறைவேறும் சமயம், மாமியாருக்கு உடம்பு முடியாமல் போனது. நல்லவேளையாக செல்ஃபோன் இருப்பதால், அன்றாடம் பேசி இங்கே உள்ள செய்திகளை அம்மாவிடம் சொல்ல முடிந்தது.

''எப்பக் கிளம்பி வர்றே ஜானகி?'' - அம்மாவின் குரலில், எட்டு மாதங்கள் மகளைப் பிரிந்த ஏக்கம் இருந்தது.

''நானும் இன்னிக்கு, நாளைக்குன்னு நாளைத் தள்ளிக்கிட்டுத்தான் இருக்கேன்ம்மா. நாற்பது மணி நேரம், முப்பது மணி நேரம் கழிச்சு திருநெல்வேலியில இருப்போம்னு மணிக்கணக்குப் பார்த்து ஏங்கினதுதான் மிச்சம். இவரோட அம்மாவுக்கு உடம்பு சரியில்லை. ஒரு வார லீவுல, மூணு நாள் மருந்து மாத்திரைன்னு போயாச்சு. அடுத்து அவர் அக்கா வீடு கோயம்புத்தூர். அங்கே போயிட்டு, ஊட்டி, மருதமலைன்னு சுத்திட்டு வரணுங்கறார்...''

''சரிம்மா. மாப்பிள்ளை மனசு கோணாம நடந்துக்கோ...''

''அதுக்கு மாமியார் மனசு சரியில்லையேம்மா. டாக்டர்கிட்டே ஊசி வேண்டாம்னு சொல்கிறார். மாத்திரையும் ஒழுங்கா போட்டுக்க மாட்டேங்கிறார். எப்ப சரியாகி எப்பக் கிளம்ப..?''

''சத்தமா பேசாதே கண்ணு?''

''அப்பா எப்படி இருக்கார்?''

''பரவாயில்லை.''

''டாக்டர்கிட்டே கூட்டிட்டுப் போனியா?''

''ம்... நீ உன் உடம்பைப் பார்த்துக்க வருவே இல்லே?''

''எதிர்பார்த்துக்கிட்டே இரும்மா. எந்த நேரத்துலயும் வரலாம்...''

செல்ஃபோனைக் கண்டுபிடித்தவனை கோயில் கட்டிக் கும்பிட வேண்டும்.

''ஜானு... ஜானு...'' குமார் கூப்பிடுவது கேட்டது.





''என்னங்க...''

''அக்கா பேசறாங்க...''

''என்னவாம்?''

''எப்போ வர்றேன்னு கேட்கறாங்க...''

''அம்மாவுக்குக் குணமாகட்டும்... இவள் பதிலில் மாமியார் முகம் மலர்வது தெரிந்தது.

''ஊட்டியில சீஸன் சூப்பரா இருக்காம். அதை முடிச்சிட்டு மதுரை போனா, என் பெஸ்ட் ஃப்ரெண்ட் பழனிச்சாமி



மூணு நாளைக்கு ப்ரோக்ராம் போட்டு வெச்சிருக்கான்.'' குமார் உற்சாகமாகப் பேசினான்.

''என்னங்க... அம்மா...''

''அம்மா வரலை... நாம ரெண்டு பேர் மட்டும்தான். அம்மாவப் பார்த்துக்க சித்தியை வரச் சொல்லியிருக்கேன்.''

''அது இல்லீங்க... எங்க அம்மா அப்பாவைப் பார்த்து ஏழெட்டு மாசம் ஆச்சு.''

# நீதான் வேண்டும் அம்மா!

''இத்தனை வருஷம் அவங்களைத் தானே பார்த்துக்கிட்டு இருந்தே? தண்ணியில்லாத தாமிரவருணியையும், பழைய ஈரடுக்கு மேம்பாலம், அதுல ஓடற டப்பா பஸ்களையும் தவிர திருநெல்வேலில என்ன இருக்கு? அல்வான்னு சொன்னா அது அங்க தயாராகி அடுத்த நாளே சென்னைல கிடைக்குது. கொஞ்சம் சிட்டிவாசி மாதிரி நடந்துக்கோ செல்லம்.''

அவன் அப்படித்தான்.

அன்பை மதிக்கத் தெரியாதவன்.

பணம், சந்தர்ப்பம், சுயலாபம் என்று மட்டுமே பார்க்கத் தெரிந்தவன்.

''ஏங்க... நம்ம முதல் குழந்தைக்கு என்ன பெயர்..?''

''குழந்தையா... கல்யாணமே வேஸ்ட்டு. இதுல குழந்தையா? அம்மாவுக்கு வயசாச்சு. அவ ஆசைப்பட்டதால கல்யாணம். ஒரு அஞ்சு வருஷத்துக்கு உலகத்தை நல்லா சுத்தணும். நல்லா அனுபவிக்கணும். எந்தக் கவலையோ, கண்ணீரோ, கால்தட்டோ இருக்கக் கூடாது. நினைச்சா வெளிநாடு... வருஷா வருஷம் சாதனைன்னு இருக்கணும். ஏம்மா, ரெண்டு வருஷத்துல ரெண்டு குழந்தைக்கு அப்பாவாக்கி சுபம் போட்டுடாதே...''

அம்மாவிடம் அவனின் வார்த்தைகளை அப்படியே சொல்ல முடியவில்லை.

ஒருநாள் பைக்கில் வேறொரு பெண்ணுடன் போனதைப் பார்த்ததை...

சாப்பாடு வேண்டாம் என்று சொன்னபோது, சுவாசத்தில் தெரிந்த வித்தியாசமான வாசனையை...

ராத்திரி பதினொரு மணிக்கு வரும் செல்ஃபோன் அழைப்பையும், நீண்ட உரையாடலையும்...

எதையும் அம்மாவிடம் சொல்ல முடியவில்லை.

அப்பாவின் ஞாபகம் வந்தது. அம்மா தான் எவ்வளவு கொடுத்து வைத்தவள்.

வேலையை விட்டு வந்தாரென்றால் அப்பா வெளியில் கூடக் கிளம்ப மாட்டார்.

அலுவலகத்தில் நடந்த சின்னச் சின்ன விஷயங்களைக் கூட சுவாரஸ்யமாகச் சொல்லுவார்.

கேன்டீனில் போட்ட ஜீரா போளி, மைசூர் போண்டா, தூள் பக்கோடா அவ்வப்போது வாங்கி வந்து அதற்கும் ஒரு கதை சொல்லுவார்.

''வேலைக்குச் சேர்ந்த புதுசல அளவு சாப்பாடுன்னா என்னான்னு தெரியாது. சர்வர்கிட்டே ரசம் முடிஞ்சு... சாதம் போட்டு மோர் விடுன்னு சொன்னேன்'' என்று அப்பாவியாகச்




வாரம் ஒருநாள் நல்லெண்ணெயில் காய்ந்த மிளகாய், வெந்தயம் போட்டுக் காய்ச்சி, ஆறவைத்து தலை மற்றும் உடலுக்குத் தேய்த்துக் குளித்து வர சூடு காணாமல் போகும். இவற்றைச் செய்து வர கோடையிலேயே இலேசாகக் குளிரெடுக்கும்.

- எஸ்.ஜம்பகலட்சுமி, கிழக்கு தாம்பரம்.



''உங்க மாமியாருக்கு இனிமே காது கேட்காதும்மா!''

''அப்படியே, வாய்க்கும் ஏதாவது பண்ண முடியுமான்னு பாருங்க டாக்டர்.''

\- பி.பாலாஜிகணேஷ்

சொல்லுவார். எப்போதாவது ஞாயிறு களில் சென்ட்ரல், பூர்ணகலா கூட்டிப் போவார்.

டிக்கெட் கிடைக்காவிட்டால் குறுக்குத் துறை முருகன் கோவில். கோவில்ல நிறையக் கூட்டம் இருந்தால், முருகனுக்கு உகந்த நாளா? இல்லை நிறைய பேருக் குத் தியேட்டர்ல டிக்கெட் கிடைக்காம கோயிலுக்கு வந்திருக்காங்களா தெரிய லையே...'' என்பார்.

அம்மாவையும், ஜானகியையும் தனி யாக விட்டு விட்டு கல்யாணம் காட்சி என்று வெளியூருக்குச் சென்றது கிடை யாது.

யூனியன் மீட்டிங் என்று அவரது தலை வரோ, எலெக்ஷன் வேலை என்று மாவட் டத் தலைவரோ அழைத்தால் கூட, சாக்கு போக்குச் சொல்லிக் கழித்து விடுவார்.

''டேய்... அவன் இன்னும் புது மாப் பிள்ளைடா... பொண்டாட்டிய விட்டுட்டு வரமாட்டான்...'' என்று நண்பர்கள் கிண்ட லடிப்பார்கள்.

''திருநெல்வேலி மட்டும் உலகம் இல்லைடா சிவராமா... ஜெயசக்தி மட்டும் பொம்பளையும் இல்லேடா... மதுரை, திருவனந்தபுரம், திருச்சி, கோவை, மெட் ராஸ்னு ஒவ்வொரு இடத்துல ஒவ்வொரு டேஸ்ட்டு தெரியுமா...?'' என்று நண்பர் கள் கிண்டலடிப்பதையும் அவரே வந்து சொல்லுவார்.

வேளாவேளைக்குச் சாப்பிடாமல், உழைத்ததில் அவரின் வயிற்றில் பிரச்னை.

வெளியில் சொல்லாமல் லோக்கல் மருத்துவம் பார்த்ததில் உடம்பு பாதிக்கப் பட்டது. தன் வலிகளைத் தனக்குள்ளேயே புதைத்துக் கொண்டார்.

சின்ன வயதில் சாப்பாட்டுக்கு வழி யில்லை. சம்பாதிக்கும் வயதில் சாப்பிட நேரமில்லை. சந்தோஷமாக அனுபவிக்க வேண்டிய வயதில் உடல் அனுமதிக்க வில்லை.

ஜானகியின் கல்யாணம் சிவராமனின் உடல்நிலையையும் கருத்தில் கொண்டு தான் அமைந்தது. ஈரடுக்கு மேம்பாலம் மட்டுமல்ல.

தன் வருகையை எதிர்பார்த்து இரண்டு இதயங்களும் துடித்துக் கொண் டிருப்பது இவர்களுக்கு எப்படிப் புரியும்?

''கண்டிப்பா அப்பாவைப் பார்க்கப் போகணுங்க..''

''பார்க்கலாம்...''

''இந்த 'பெருந்தலைவர்' வார்த்தை வேண்டாம். அழுத்தம் திருத்தமா சொல் லுங்க.''

''வர்றேன்...''

இந்த ஒரு வார்த்தைக்காகத்தான் அவள் காத்திருந்தாள்.

அவனே சம்மதித்தாலும், அவன் அக்கா அவனை அத்தனை சீக்கிரம் அனுப்புவதாக இல்லை. மருதமலை, சூர்யா படம், அன்னபூர்ணா டிஃபன் என்று பொழுது நெருப்பின் மேல் நிற்கிற மாதிரி கழிந்தது.

''என்னங்க இன்னும் ரெண்டு நாள்தான் இருக்கு...''

''எது ப்ளஸ்டு பரீட்சை ஆரம்பிக்கவா? அக்கா பொண்ணு நல்லா எழுதுவா. நீ கவலைப்படாதே.''

''இல்லைங்க திருநெல்வேலி...''

''அங்கேயும் ப்ளஸ்டு எக்ஸாம் ரெண்டு நாள்லதான். அது என்ன சிலோன்லயா இருக்கு...?''

குடும்பம் சிரித்தது.



**''நீதாம்மா வேணும். நாள்முழுக்க உன் கூட உட்கார்ந்து பேசணும்.''**



**ம**தியம் ரெண்டு மணிக்கு பஸ்.

''அப்பாடா எட்டு மணி நேரத்தில் நெல்லை.''

மதுரை வரை கனவு சரியாகத்தான் நிறைவேறி வந்தது.

விருதுநகர் தாண்டியதும் வண்டி பிரேக் டவுன் ஆனது. காட்டு வழியில் காத்திருக்க வந்தது.

அம்மா அதற்குள் செல்லில் மூன்று முறை வந்து விட்டாள்.

''இதுக்குத்தான் திருநெல்வேலி வேண்டாம்னு சொன்னேன். கேட்டியா?''

இவளின் வருத்தம் வேறுவிதமாக இருந்தது. நாளைக் காலை கிளம்ப வேண்டும். இரவு அம்மாவிடம் நிறையப் பேச வேண்டும். அப்பாவிடம் சென்னையில் கேட்ட கச்சேரிகளைச் சொல்ல வேண்டும்.

ஒருவழியாய் மாற்று பஸ் வர இரண்டு மணி நேரம் ஆனது. இரவு பத்து மணிக்கு நெல்லையில் இறங்கிய அவளை அந்த அதிர்ச்சி போஸ்டர் வரவேற்றது.

கண்ணீர் அஞ்சலி - ஏ.ஆர்.ஈஸ்வரன்.

ஜானகியின் பள்ளி, கல்லூரித் தோழன் தூரத்துச் சொந்தமும் கூட. ஒரே தங்கை - ஊனமாய்ப் பிறந்து விடத் தன் ஆசைகளை அவளுக்காகத் தள்ளி வைத்த அன்பு அண்ணன்.

ஜானகியின் அத்தனை சந்தோஷங்களும் அந்த ஒரே போஸ்டரில் காணாமல் போனது.

அம்மாவிடம் நடு இரவில் கேட்டாள்.

''ஏம்மா சொல்லலை... எனக்கு...''

''நீ கஷ்டப்படுவேன்னுதான். செல்லுல பேசிக்கிட்டு பைக்ல போகும்போது...''

''செல்லில பேசியிருக்கக் கூடாது இல்லே...''

''தங்கைதான். ஏதோ அவசரத்துல கூப்பிடறா ளோன்னு...''

''ஜானு... லைட்டை அணை. நேரமாகுது காலைல சீக்கிரம் கிளம்பணும்...'' உத்தரவு வந்தது குமாரிடமிருந்து.

அம்மா எப்போ தூங்கினாள் தெரியவில்லை. காலை ஐந்து மணிக்கு கார் வந்தது.

''காலம்பறதுக்கு இட்லி வைச்சிருக்கேன். மதியம் மாப்பிள்ளைக்குப் பிடிச்ச பிரியாணி, உனக்குப் பிடிச்ச தக்காளி சாதம், தயிர் சாதம், வேற என்ன வேணும் ஜானகி?''

''நீதாம்மா வேணும். நாள் முழுக்க உன் கூட உட்கார்ந்து பேசணும்'' வாய் வரை வந்து விட்ட வார்த்தைகளைக் கஷ்டப்பட்டு விழுங்கினாள். ''ரொம்பச் சந்தோஷம் மாப்ளே...'' வழியனுப்பினாள் அம்மா. ●

ஊர்வசி மேடம்
ஐ-பாட் வாங்கி
தனிமையில தன்னைப் பத்தின
ஞாபகச் சிற்பங்களை
வார்த்தையால
செதுக்க ஆரம்பிச்சுட்டாங்க.
அடடா! என்ன சிரிப்பு!
எத்தனை சுவாரஸ்யம்!



விரைவில் வருவாங்க,
கல்கி வாசகர்களைக்
கலகலப்பாக்க...





"மன்னா, தங்கள் அறையிலுள்ள அசின், தமன்னா, நயன்தாரா படங்களை மகாராணி பார்த்துட்டாங்க..."

"அடடா, எல்லாத்தையும் கிழிச்சிட்டாளா?"

"இல்ல... பதிலுக்கு அவங்க அறைக்குள்ள சிம்பு, தனுஷ், சூர்யா படங்களை மாட்டி வச்சிருக்காங்க..."

- எம்.மிக்கேல் ராஜ்




- தெ. சுந்தரமகாலிங்கம்

"ஒரு மாசத்துல உங்க சர்ஜன் சராசரியா எத்தனை ஆபரேஷன் பண்றார்?"

"அத்தனை ஆபரேஷனையும் சராசரியாத்தான் பண்றார்!"

-வெ.சீதாராமன்

"அது சீரியல் பார்த்தே நொடிச்சுப் போன குடும்பம்!"

"என்ன, சொல்றீங்க?"

" 'சுயமாக ஒரு சண்டை' கூட அவங்களுக்குப் போட்டுக்கத் தெரியாது!"

- அ.சுஹைல் ரஹ்மான்

"நீங்க சாப்பாட்டு விஷயத்துல ரொம்ப கண்ட்ரோலா இருக்கணும்."

"நான் கண்ட்ரோலாதான் இருக்கேன். என் மனைவி பண்ற சாப்பாட்டை சாப்பிடறதேயில்லை டாக்டர்."

- வி.சாரதி டேச்சு

# அவன் Cot-ல



"என்னப்பா இது போர்டுல? 'வருத்த மீன்'னு எழுதியிருக்கு. பிழையா இல்லே இருக்கு?"

"அந்த மீன் சாகும்போது 'வருத்த'ப்பட்டிருக்கும் இல்லிங்களா அதுக்குத்தான்!"

- ஜீ.வி.சுபாஷ்




"எவனாவது பிட்பாக்கெட்காரனிடந்தான் கேக்கணும்!"

"என்ன திடீர்னு உங்களுக்கு உங்கம்மா வீட்டுக்குப் போய் ஒரு வாரம் இருக்கணும்னு ஆசை?"

"வேற ஒன்னுமில்ல, என் அப்பா கை சமையல் சாப்பிடணும் போல இருக்குது!"

- வெ.சீதாராமன்

"ராத்திரியானா பிச்சை எடுக்குறியே! பகலில் என்ன பண்ணுவே?"

"என் ஃபைனான்ஸ் கம்பெனியைப் பார்த்துக்குவேன்."

- ஜீ.வி.சுபாஷ்

"மூட்டைப்பூச்சி அதிகமா இருக்கே, உங்க கட்டிலை வெயில்ல மொட்டை மாடில போடவா?"

"வேணாம், அக்கம் பக்கத்திலே இருக்கறவங்க, அப்புறம் என் "Cot'ல வெயில்"'னு கேலி பேசுவாங்க! - ராமன்



# வெயில்!

**கோடைக்குக் காரணமான கதிரவன் பற்றிய ஆதி கதைகள், அறிவியல் யூகங்கள் என்னவாயிருந்தது என அலச ஆரம்பித்தால்... இப்படித்தான் துவங்குகிறது...**

முன்பொரு சமயம், நீரில் இருந்து ஒரு முட்டை தோன்றியது. அந்த முட்டையின் ஓட்டை உடைத்துக்கொண்டு ஒரு உருவம் வெளிவந்தது. அவர் பெயர் ரே. வெளியில் வந்தவுடன் அவருக்கு இரு குழந்தைகள் பிறந்தன. ஒன்று, காற்று. மற்றொன்று, மேகம். இவர்களுக்கு மேலும் சில குழந்தைகள் பிறந்தன. அந்தக் குழந்தைகளுள் ஒன்று, பூமி. மற்றவை, நட்சத்திரங்களாக மின்ன ஆரம்பித்தன. ஒரு நாள் ரே ஏதோ ஒரு காரணத்தால் அழ ஆரம்பித்துவிட்டார். கண்ணீர்த் துளிகளில் இருந்து மனிதர்கள் பூக்களைப் போல் மலர ஆரம்பித்தார்கள். பிறகு அவர் நைல் நதியைத் தோற்றுவித்தார்.

எகிப்தியர்களைப் பொறுத்தவரை, அனைத்துக்கும் ஆதாரம் ரே. அவரே சூரியக் கடவுள்.

ரே தவிர வேறு பல சூரியக் கடவுள்களும் இருக்கிறார்கள். அதிகாலை உதிப்பவர், கெப்ரி.

மதியம் கொளுத்துபவர், ரா. டியூட்டி முடித்து சாயங்காலம் மறைந்துவிடுபவர் அடும்.

***

சீனர்களுக்கு சூரியன், ஒன்றல்ல பத்து. தாயார் 'க்சி ஹீ' தன் பத்துக் குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு கிழக்கே உள்ள ஆற்றில் இறக்கிவிடுவார். அங்கே பத்துப் பேரையும் குளிக்கவைத்து, ஒவ்வொரு குழந்தையையும் அங்குள்ள ஒரு பெரிய மரத்தில் உள்ள கிளைகளில் ஏற்றிவிடுவார். தினமும் ஒரு சூரியக் குழந்தை கிளம்பி வானுக்குச் சென்று பிரகாசிக்கவேண்டும். அதுவரை மற்ற குழந்தைகளுக்கு விடுமுறை என்பதால் அவர்கள் விளையாடிக்கொள்ளலாம். தினம் ஒரு சூரியன். தினம் ஒரு குழந்தை.

ஒரு சமயம் இந்தக் குழந்தைகளுக்குப் போரடித்துவிட்டது. நாம் அனைவரும் ஏன் ஒரே சமயம், வானில் தோன்றக் கூடாது? தாயாரின் அனுமதி இல்லாமல் பத்தும் தோன்றிவிட்டன. பத்து சூரியனின் வெயிலைத் தாங்கமாட்டாமல் பூமியில் உள்ள உயிர்கள் கத்த ஆரம்பித்துவிட்டன. கடைசியில், தந்தை விரைந்துவந்து, பத்து அம்புகள் பூட்டப்பட்ட வில்லை வளைத்து, குழந்தைகளை அச்சுறுத்தி அவர்களை விடைபெறச் செய்தார். அன்று தொடங்கி, இன்று வரை தினம் ஒரு குழந்தை மட்டும் வானில் தவழ்கிறது.



# கடவுளின்

***

இப்படி, ஒவ்வொரு கலாச்சாரமும்



ஒவ்வொரு விதமாகச் சூரியனை முன்னிறுத்துகிறது.

கதையைக் கடந்து சூரியனைப் பற்றிய முதல் அறிவியல் விளக்கத்தை அளித்தவர்களுள், கிரேக்கத் தத்துவஞானி,



# கைங்கர்யம்!

அனாக்ஸகோரஸ் ஒருவர். நாம் எல்லோரும் நினைப்பதைவிடவும் சூரியன் பெரிது. சந்திரன் சூரியனிடம் இருந்தே தன் ஒளியைக் கடனாகப் பெற்றுக்கொள்கிறது என்றார். மதகுருமார்கள் 'அப்படியென்றால் கடவுளுக்கும் சூரியனுக்கும் தொடர்பில்லையா?' அற்ப மானிடா, கடவுளை விடவும் சூரியன் பெரிது என்று சொல்லத் துணிகிறாயா? ஆம்! அப்படித்தான் என்று அடக்கமாகப் பதிலளித்தார் அனாக்ஸகோரஸ். எனில், நீ உள்ளேயே கிட என்று சிறைப்படுத்திவிட்டார்கள்.

அடுத்தக்கட்டமாக, சூரியனுக்கும் பூமிக்கும் இடையிலான தூரத்தைக் கணக்கிடும் முயற்சிகள் ஆரம்பமாயின. கி.மு. 3-ம் நூற்றாண்டில் எரடோஸ்தனஸ், கி.மு.1-ம் நூற்றாண்டில் டாலமி ஆகியோர் தங்கள் கணிப்புகளை வெளியிட்டார்கள். கடவுளையே அளக்கத் துணிந்து விட்டாயா, உங்களுக்கு அத்தனை அகந்தையா என்று அப்போதும் சீறினார்கள்.

கடவுள் உருவாக்கிய பூமியை அல்ல, சூரியனை மையமாக வைத்தே கிரகங்கள் சுற்றி வருகின்றன என்று கி.மு.3-ம் நூற்றாண்டில் கிரேக்கர்கள் அறிவித்தார்கள். ஆனால், அதற்கான ஆதாரங்களை அவர்களால் சமர்ப்பிக்கமுடியவில்லை. எனவே, அவர்கள் இகழப்பட்டார்கள், நண்டிக்கப்பட்டார்கள், ஒதுக்கப்பட்டார்கள். பின்னர், 16-ம் நூற்றாண்டில் கோப்பர்நிக்கஸ் கணிதம் கொண்டு இந்த வாதத்தை நிரூபித்தபோது, மதவாதிகள் அதிர்ந்து போனார்கள். கலிலியோ டெலஸ்கோப்பை உருவாக்கி, வானத்தை நோக்கித் திருப்பிய போது, மதம் அதுவரை செலுத்தி வந்த அதிகாரம் ஆட்டம் காண ஆரம்பித்தது.

பல கேள்விகளுக்கு இன்று விடைகள் கிடைத்துவிட்டன என்றாலும், சூரியனை இன்னமும் மனிதர்கள் முழுவதுமாகப் புரிந்துகொண்டுவிடவில்லை. இதனாலேயே சூரியன் மீண்டும் கடவுளாக மாற்றப்பட்டுவிட்டது.

கடவுளைத் தவிர வேறு யாராலும் இப்படியொரு கைங்கரியத்தை, பிரபஞ்ச சக்தியை உருவாக்கியிருக்கமுடியாது என்று அவர்கள் சிலாகிக்கிறார்கள். இந்தச் சிலாகிப்பே இன்னுமின்னும் சூரியக் கதைகள் தோன்றக் காரணமாகியிருக்கிறது.

மருதன்

# அடுத்த முறை 'தடா' வரணும்!

**திருச்சியைச் சார்ந்த சிறந்த கல்வியாளர்கள், முக்கியப் பிரமுகர்கள் ஒன்றுசேர்ந்து கோடை வகுப்புகள் பற்றி... இனி அடுத்த வருடம் தாம் செய்ய வேண்டியது பற்றி... இந்தக் கோடையுதிர் காலத்தில் பேசி விவாதித்தனர். அந்த விரிவான கலந்துரையாடலிலிருந்து சில வரிகள்...**




**கீதா நந்தகோபால் (பேராசிரியை, பிஷப் ஹீபர் கல்லூரி):**

உயர்கல்வியில் சீட் கிடைக்கிறதுக்கு போராட வேண்டிய சூழலில், பிளஸ் டூ முடித்தவர்களுக்கு மட்டும் கல்விசார்ந்த சம்மர் க்ளாஸ் அவசியப்படுது. அது தவிர்க்க முடியாதது. மற்ற பிள்ளைகள் விடுமுறையை ரசிக்க, கொண்டாட பெற்றோர்கள் அனுமதிக்கணும். இல்லேன்னா புத்தி இயந்திரமாயிடும்.

**டி.ஆர்.தர்மராஜ் (தாளாளர் - ஸ்ரீசரஸ்வதி கல்வியியல் கல்லூரி):**

சென்னையில பாட்டி கதை சொல்லும் வகுப்புகள் பரவலா நடக்கிறதா நண்பர் சொன்னார். அங்கேயும் யூத் டீச்சர்தான் பாட்டி ஸ்தானத்துல. நாம நம்மோட வேர்களை எப்படி இழந்துட்டு வர்றோம் பாருங்கோ... இதை அனுமதிக்கக் கூடாது.

**டி.பாலன் (செஞ்சிலுவைச் சங்கம்):**

செல்ஃபோன் எப்படித் தவிர்க்க முடியாதோ, அப்படித்தான் 2000-ல் பரவிய இந்த ஃபேஷன். ஆனாலும், உறவினர் வீட்டுக்குப் போயிட்டு வர்றதே உறவை வளர்க்கின்ற சம்மர் கிளாஸ்ன்னு புரிய வைக்கணும் பெற்றோர்க்கு.

**கே.வி.ஜி. ரவீந்திரன்: (தாளார் - பால வித்யா மந்திர் மெட்ரிகுலேஷன்):**

அடுத்த வருஷமாவது 10ம் வகுப்பு வரை சம்மர் கிளாஸுக்கு ஒரு அவசரத் தடா வரணும். பார்க் செடிகளை வெட்டி விட்டு வேடிக்கை பார்க்கிற புத்தி மாதிரி, இந்த கிளாஸ், இந்த கூடார கௌரவம் குறைய வேணும்.

**- சரவணன் திரு**

# அருள்வாக்கு

# தரமான வாழ்வு!

வசதி இருக்கிறவர்கள் தேவைக்கு மேல் பட்டுப் புடைவை, ஸில்க் ஷர்ட் என்று தோஷத்தை அதிகமாக இப்போது வளர்த்துக் கொண்டிருப்பது ஒரு பக்கம். அதே சமயம் இவர்களைப் பார்த்து வச தியில்லாதவர்களுக்கும் சபலம் பிடித்து ஆட்டுகிறது. அவர்களும் கூடக் கடன் வாங்கியாவது, இந்த வேண்டாத தேவைகளைப் பூர்த்தி பண்ணிக் கொள்ள நினைத்து, கடனாளியாகி அநேக உபத்திரவங்களுக்கு உள்ளாகி வருகிறார்கள்.

தேவையை எவ்வளவுக்கு எவ் வளவு அதிகப்படுத்திக் கொள் கிறோமோ, அவ்வளவுக்கு அவ்வளவு சாந்தி குறையும்; சௌக்கியம் குறையும்; நிம்மதியும், திருப்தியும் குறையும். தரித்திரம், துக்கம் உண்டாகும். Standard of Living என்பதை 'வாழ்க்கைத் தரம்' என்று மொழி பெயர்ப்பதே சரியல்ல. 'வாழ்க்கைத் தரம்' என்பது மிகவும் உயர்ந்த விஷயம். நல்ல குணங்களுடன், ஈசுவர பக்தியுடன் வாழ்கிற வாழ்வே 'தரமான' வாழ்வு. வாழ்க்கைத் தரத்தை Quality of life என்று சொல்ல வேண்டும். தற்போது பொருளாதாரத் தேவைகளை அதிகமாக்கிக் கொண்டேபோவதைத் தான் 'வாழ்க்கைத் தரம்' என்கிறார்கள். இதை விட்டு, மனசினால் உயர்ந்த, வாஸ்தவ மாகவே வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக் கொள்வதைத்தான் பெரியதாக எண்ண வேண்டும்.

நான் சொல்லி ராஜாங்கத்தார் கேட்கப் போவதில்லை. ஆனா லும் எனக்குத் தோன்றுவதைச் சொல்லத்தான் வேண்டும். நம் ஜனங்களுக்கு நிஜமாக நல்லது செய்ய வேண்டும் என்றால் இப்போது பொருளாதாரக்காரர்கள் 'வாழ்க்கைத் தரம்' என்று எதைச்



சொல்கிறார்களோ அதைக் குறைப்ப தற்கு, இறக்குவதற்குத்தான் திட்டம் போட வேண்டும்; உயர்த்துவதற்கல்ல.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

# உள்ளும் புறமும்

**வண்ணநிலவன்**



கிருஷ்ணபாரதி வீட்டினுள் நுழைந்தபோது, மனோகரியின் குரல் கேட்டது. பைக்கை நிறுத்தி விட்டு உள்ளே வந்தான். ஹாலில் சண்முகம் உட்கார்ந்திருந்தார். அம்மாவும் இன்னொரு சோபாவில் உட்கார்ந்திருந்தாள். கார்த்திகாவைக் காணவில்லை. உள்ளே படித்துக் கொண்டிருக்கிறாளோ என்னவோ? வீட்டில் என்ன களேபரம் நடந்தாலும், அவள் பாட்டுக்குப் படித்துக் கொண்டிருப்பாள். வராந்தாவில் பெஞ்சில் உட்கார்ந்து ஷூவைக் கழற்றும்போதே சண்முகம் எழுந்து வந்து கதவடியில் நின்றார்.

''எப்படிப்பா'' இருக்கான் வருண்..?''

''கட்டுப் போட்டிருக்கு. உள்ளேதான் படுத்திருக்கான்'' என்றார் சண்முகம். அம்மாவும் எழுந்து அவனருகே வந்தாள்.

''மாடிப்படியிலே இறங்கி வரும்போது பிள்ளைகள் ஒண்ணு மேலே ஒண்ணு இடிச்சுத் தள்ளி விட்டிருக்கு. பெரிய க்ளாஸ் பையன்களை மாடியிலே வைச்சுட்டு,

சின்னப் பசங்களுக்கெல்லாம் க்ளாஸ் வைக்கக்கூடாதா...? பிரின்ஸ்பாலைப் பார்த்துப் பேசு..." என்றாள் பாப்பம்மாள்.

"ஆமா... இப்போ அதுதான் ரொம்ப முக்கியம்..." என்று மனைவிக்குக் கேட்காதவாறு முணுமுணுத்தார் சண்முகம். கிருஷ்ணபாரதி ஹேண்ட்பேக்கை மேஜை மீது வைத்துவிட்டு, வேகமாக உள்ளே பெட்ரூமுக்குள் சென்றாள். வருண் படுக்கையில் படுத்திருந்தான். பக்கத்தில் மனோகரி உட்கார்ந்திருந்தாள். அவளைப் பார்த்ததும், "பாருங்க... ஓடிப் போய் கையை ஒடிச்சிட்டு வந்திருக்கான்" என்றாள். கிருஷ்ணபாரதி வருணருகே போய் நின்று, குனிந்து அவனைப் பார்த்தாள். வருண் அமைதியாக அப்பாவை ஏறிட்டுப் பார்த்தான்.

"ரொம்ப வலிக்கிறதாடா...?"

"ரொம்ப இல்லேப்பா. இலேசா வலிக்குது."

"டாக்டர் இன்ஜெக்ஷன் போட்டிருக்கார். அதனாலே வலி இல்லே. ராத்திரி நேரம் ஆக

மெல்லினத் தொடர்கதை

8

ஆகத்தான் வலிக்கும்'' என்றாள் மனோகரி.

''நீ அப்பவே வந்திட்டியா?''

''நீங்க வர்றதுக்கு ஒரு அஞ்சு நிமிஷம் முன்னாடிதான் வந்தேன்.''

''அம்மா ஏதோ பிள்ளைகள் மாடிப் படியிலேருந்து தள்ளி விட்டுட்டதுங்கிறாளே'' என்றான் கிருஷ்ணபாரதி.

''ஒங்க அம்மாவுக்கு பேரன் மேலே தப்பே சொல்லக்கூடாது... அவனேதான் சொல்றானே... வேகமாக இறங்கி வந்தேன்... படியிலே உருண்டுட்டேன்னு எதுக்கு படிக்கட்டிலே ஓடி வரணும்கிறேன்?''

''சூடா ஏதாவது குடுத்தியா?''

''ஹார்லிக்ஸ் குடுத்தேன்.''

''பேசாமே கண்ணை மூடிக்கிட்டுத் தூங்குடா... சரியாயிரும்...''

''தூக்கம் வரலைப்பா...''

''ஒரேயடியா சாப்பாட்டை முடிச்சப்புறம் தூங்கட்டும்...'' என்றாள் மனோகரி.

''கார்த்திகாவை எங்கே?''

''அவ ஹோம்-வொர்க் எழுதிக்கிட்டு இருக்கா...'' என்று சொல்லிக்கொண்டே மனோகரி எழுந்து நின்றாள்.

''அம்மா, போகோ பார்க்கிறேன் அம்மா...'' என்றான் வருண்.

''அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம். பேசாமே படுத்திரு. நான் தோசை சுட்டுட்டு வாரேன். சாப்பிட்டுட்டு, மாத்திரை எல்லாம் போட்டுட்டுத் தூங்கணும்...'' என்றாள் மனோகரி.

''வேணும்னா டீ.வி. பார்த்துட்டுப் போறான்...'' என்றான் கிருஷ்ணபாரதி.

''ஒங்களுக்குத் தெரியாது.அவன் டீ.வி. எல்லாம் பார்க்க வேண்டாம்'' என்று உத்தரவிட்டு விட்டுச் சமையலறைக்குப் போனாள் மனோகரி. அவனுடைய ஹேண்ட்பேக் வருண் அருகில் படுக்கையிலேயே கிடந்தது. சட்டையைக் கழற்றுவதா, வேண்டாமா என்று யோசித்தான். சுசீலாவுடைய ஞாபகம் வந்தது. பின்னால் வருகிறேன் என்றாளே, வரக் காணோமே. அவள் வராத வரை நல்லதுதான். அவள் வந்து நின்றால் பூகம்பம்தான் வெடிக்கும். பேண்ட், சட்டையைக் கழற்றிவிட்டு லுங்கி, பனியனுடன் கார்த்திகாவைத் தேடிப் போனான்.

கார்த்திகா குனிந்து எழுதிக் கொண்டிருந்தாள். அவளைத் தொந்தரவு

நகரத்தில் வளர்ந்த பிள்ளைகள் கிராமத்திலும், கிராமங்களில் வாழும் பிள்ளைகள் நகரத்தில் இருக்கும் உறவினர் வீடுகளிலும் தங்கலாம். இதனால் இரு சூழ்நிலைகளிலும் வெவ்வேறு வகையான வாழ்க்கை முறையினை குழந்தைகள் கண்முன் உணர்வார்கள்.

– பவித்ரா நந்தகுமார், ஆரணி






செய்ய வேண்டாம் என்று ஹாலில் போய் உட்கார்ந்தான். பாப்பம்மாள் எழுந்து வருண் அறைக்குப் போனாள்.

"டாக்டர் பீஸெல்லாம் யார் குடுத்தா? நீங்க குடுத்தீங்களா?" என்று சண்முகத்திடம் கேட்டான்.

"ஒரு சார்தான் ஆட்டோவிலே கட்டுப் போட்டுக் கூட்டிக்கிட்டு வந்தாரு. அவர் கூட ராஜேஷ் வந்தான். பீஸ் எல்லாம் அப்புறம் பார்த்துக்கலாம்ன்னார். நான், கேட்டுக் குடுத்துட்டேன். உன் பீரோவிலே இருந்துதான் எடுத்துக் குடுத்தேன்" என்றார் சண்முகம். கிருஷ்ணபாரதிக்குத் திருப்தியாக இருந்தது.

"எந்த டாக்டர்...?"

"ஹிந்து மிஷன்லேதான் காட்டியிருக்காங்க. நாலு நாள் கழிச்சுப் போகணும். பள்ளிக்கூடம் போறதுக்கு பதினைஞ்சு நாளாவது ஆகும்" என்றார்.

அவர் வருத்ததத்தில் சொல்கிறாரா, சாதாரணமாகச் சொல்கிறாரா என்று தெரியவில்லை. பேசாமல் வாசலைப் பார்த்துக் கொண்டேயிருந்தான். சமையலறையில் மனோகரி தோசை சுடுகிற சத்தம் கேட்டது.

மனோகரியின் மொபைல் அடித்தது. அவளுடைய ஹேண்ட்பேக்கினுள்ளிருந்து சத்தம் வந்தது. வருணுக்குப் பக்கத்திலிருந்த பாப்பம்மாள் எங்கேயிருந்து சத்தம் வருகிறது என்று அங்குமிங்கும் பார்த்தாள்.

"அம்மா மொபைல்தான் ஆச்சி அடிக்குது. அவ ஹேண்ட்பேக்லே இருந்து சத்தம் கேட்குது..." என்றான் வருண். அதற்குள் மனோகரியே சத்தம் கேட்டு வந்து விட்டாள். அவசர அவசரமாகத் திறந்து மொபைலை எடுத்துப் பார்த்தாள். அவள் தம்பி மனோகர்தான். பச்சை பட்டனை அழுத்திக் காதில் வைத்துக் கொண்டே சமையலறைக்குள் சென்றாள்.

"அக்கா நான் மனோகர் பேசறேன் அக்கா..."

"தெரியுதுடா... எப்படி இருக்கே?"

"நல்லா இருக்கேன் அக்கா."

"அப்பா, அம்மா, தங்கச்சி எல்லாரும் சௌக்கியமா?"

"எல்லோரும் நல்லா இருக்காங்க அக்கா... அத்தான் எப்படி இருக்காங்க...? மாமா, அத்தை, குழந்தைகள் எல்லாம் சௌக்கியமாக்கா...?"

"எல்லாரும் நல்லா இருக்காங்கடா. வருண்தான் ஸ்கூல்லே கையை ஒடிச்சிட்டு வந்து கட்டுப் போட்டுக்கிட்டுப் படுத்திருக்கான்..."

"ஐயையோ... எப்போ? ரொம்பப் பலமான அடியா...?" என்று பதறினான் மனோகர்.

"இடதுகையிலே அடி... ப்ராக்சர்..."

"என்னைக்கி?"

"இன்னைக்குத்தான். இப்போ கொஞ்சம் முன்னாலேதான்... பள்ளிக்கூடத்திலே விழுந்துட்டான். என்ன செய்கிறது? எல்லாம் நம்ம நேரம்..."

"அடடா... பாவம்... அவனுக்கு அடிக்கடி ஏதாவது, ஒண்ணு இல்லாட்டா ஒண்ணு வந்திருது..."

''சரி... உன் வேலை எல்லாம் எப்படியிருக்கு?''

''ஆபீஸ் விஷயமா நாளைக்கு மெட்ராஸ் புறப்படுறேன். அதைச் சொல்லத்தான் ஃபோன் பண்ணினேன்...''

மனோகரி கல்லில் கிடந்த தோசையை எடுத்து விட்டு, அடுத்த தோசையை ஊற்றினாள். அந்தச் சத்தம் மனோகருக்குக் கேட்டது.

''ஏதாவது வேலையா இருக்கியா அக்கா? அப்புறமா பேசவா?''

''இல்லேடா... வருணுக்குத்தான் தோசை சுட்டுக்கிட்டு இருக்கேன். நீ பேசு... ரஞ்சனி எப்படி இருக்கா? அப்பா, அம்மாவுக்கு ஒடம்பெல்லாம் பரவாயில்லையா?''



''ரஞ்சனி காலேஜ் போறாக்கா... அம்மாவுக்குத்தான் மூட்டுவலி.''

''நீதான் அம்மாவுக்கு பர்மனெண்ட்டா ரெஸ்ட் குடுக்கணும். உனக்கு ஜாதகம் ஏதாவது வருதா?''

''ஏதோ அப்பாதான் அடிக்கடி ஜோசியர் வீட்டுக்குப் போயிட்டு வர்றார். எனக்குக் கல்யாணம் பண்ணிக்க இஷ்டமில்லேக்கா. நீங்கள்லாம் சொல்றீங்களேன்னுதான் வேறே வழியில்லாமே ஒத்துக்கிட்டேன்...''

''நானும் அப்படித்தான் சொல்லிக்கிட்டு இருந்தேன்.. எல்லாம் கல்யாணம் பண்ணிகிட்டா சரியாப் போகும். வயசு காலத்திலே அப்பா, அம்மாவை நீதானேடா காப்பாத்தணும்...?''

''என்னம்மோக்கா...''

''எந்த வண்டியிலே வர்றே?''

''நெல்லையிலே...''

''சரி. மாம்பலத்திலே இறங்கப் போறியா, இல்லே தாம்பரத்திலேயே இறங்கிடுறியா?''

''மாம்பலத்திலேயே இறங்கி வர்றேன் அக்கா. சரி... நீ வருணைக் கவனிச்சுக்கோ.''

''சரி... பார்த்து வந்து சேரு...''

''சரிக்கா... வச்சிரட்டுமா?''

''எல்லோரையும் கேட்டேன்னு சொல்லு...''

''சரிக்கா...''

தோசைத் தட்டை எடுத்துக் கொண்டு பெட்ரூமுக்குப் போனாள் மனோகரி. அவளுக்கு ஒரு சந்தேகம் வந்தது. வருணுக்குத் தோசை கொடுக்கலாமா?

''ராசா நீ ஒரு புதிய புத்தகம்!''
''அப்ப ஒரு tag ஒண்ணு கட்டுங்க...''
''அப்படின்னா...?''
''ஒரு வைர நெக்லஸ் வாங்கிக் குடுங்கன்னு சொன்னேன்!''
- வி.பிரகாஷ்

கஞ்சி கொடுக்கலாமா என்று நினைத்தாள். அவனிடமே கேட்டாள்.

''டாக்டர் என்ன சாப்பிடலாம்னு சொன்னார்டா?''

''டாக்டர் ஒண்ணும் சொல்லலேம்மா.''

பாப்பம்மாள் வருணின் நெஞ்சில் கையை வைத்துச் சுடுகிறதா என்று பார்த்தாள். சூடு இல்லை. கிருஷ்ணபாரதியும் கட்டிலில் வந்து உட்கார்ந்து கொண்டான்.

''காய்ச்சல் இல்லை... தோசைதானே? சும்மா குடு...'' என்றாள்.

வீட்டு வாசலில் ஆட்டோ வந்து நின்றது. ஆட்டோவிலிருந்து கவிதா இறங்கிக் கொண்டிருந்தாள்.

(தொடரும்)




# ஒவ்வொருவருக்கும் ஒரு வெற்றி!

சிறுபிள்ளைகளுக்கு ஏதோ ஒரு விஷயத்தில் திறமை இல்லை என்பதற்காக, அவர்களைக் குத்திக் காட்டுவதும் மனம் புண்படும்படி பேசுவதும் பெரும் பாதகம் ஆகும்.

மனிதனுடைய மூளை அமைப்பு வெவ்வேறு வகைப்பட்டது. ஒவ்வொருவனுக்கு ஒவ்வொரு காரியத்தில், மூளை திறமையாக வேலை செய்யும்.

எவரெஸ்ட் சிகரத்தை முதன் முதலாக எட்டிப் பிடித்த டென்ஸிங்குக்குக் கணக்கு வராது. அவன் எந்தக் கணக்குப் பரீட்சையிலும் 100க்கு 100 மார்க் வாங்கியதில்லை. அவனுடைய படிப்பே மிகச் சொற்பந்தான். ஆயினும் அவனுடைய பெயர் இன்று உலகப் பிரசித்தி அடைந்துவிடவில்லையா? அவனுக்கு மரியாதை செய்து பெருமைப்படுத்துவதற்காகப் பெருந்திரளான மக்களும் மந்திரிகளும் கவர்னர்களும் ஜனாதிபதியும் போட்டியிட்டுக் கொண்டு முன் வரவில்லையா?

தனக்குக் கணக்குப் போடவரவில்லை என்பதற்காக, டென்ஸிங் சிறு வயதில் தற்கொலை செய்து கொண்டிருந்தால், உலகம் எப்பேர்ப்பட்ட விபரீத நஷ்டத்தை அடைந்திருக்கும்?

''எனக்குக் கணக்கு வரவில்லை'' என்று ஒரு பிள்ளை தூக்குப் போட்டுக் கொண்டான் என்றால், எத்தனையோ ஆயிரம் பிள்ளைகள் கணக்கு வரவில்லை என்பதற்காகவோ, வேறு பாடம் வரவில்லை என்பதற்காகவோ, மனச் சோர்வு அடைந்து தோல்வி மனப்பான்மை கொள்கிறார்கள்.

இதனால், சுதந்திர இந்திய தேசம் அடைந்து வரும் நஷ்டத்தை அவரவர்களும் கற்பனை செய்து பார்த்துக் கொள்ளலாம்.

இந்தப் பெருங்குறையை நீக்கக் கூடியது சென்னை சர்க்காரின் புதிய கல்வித் திட்டம். கையினால் வேலை செய்து ஒரு பொருளை உற்பத்தி



செய்யும் சக்தி படைத்த எந்த இளைஞனும் மனச் சோர்வு கொள்ள மாட்டான். வாழ்க்கையில் ஊக்கம் கொண்டிருப்பான். வாழ்க்கையின் பலதரப்பட்ட துறைகளில், ஏதேனும் ஒன்றில் வெற்றி அடையலாம் என்னும் நம்பிக்கை கொண்டிருப்பான். வெற்றியும் அடைவான். டென்ஸிங்கைப் போல் உலகமே போற்றக்கூடிய வெற்றியையும் சிலர் அடையக் கூடும்.

- கல்கி 5.7.1953

# எல்லோருக்குமான ஏ.ஸி.!

**"சும்மா திருப்புனாலே, திருப்பனந்தாள் விசிறியில தித்திக்கும் காத்து வரும்"** என்பது அவ்வூர் கிராமமொழி. கொளுத்தும் கோடையில் ஏழைகளுக்கு மட்டுமல்ல; எல்லோருக்குமான ஏ.சி.யாக இருப்பது பனையோலை விசிறிகளே. அந்தப் பாரம்பரிய விசிறிக்குப் பேர் போனது திருப்பனந்தாள் கிராமம். கரண்ட் கட்டாகும் போதெல்லாம், கட்டாயம் கரங்கள் தேடும் விசிறிகளுக்கு இந்த ஊரும் பொறுப்பு. விசிறித் தொழில் இப்போ வீழ்ந்து டுச்சா? நிலவரம் என்னன்னு? விசாரிக்கப் போனோம்... விசிறித் தொழிலைப் பாரம்பரியமாகச் செய்து வரும் மனோகரன் எதிர்ப்பட்டார்...

"எங்க ஊரு பக்கம் பனைமரங்க அதிகம். திருப்பனந்தாள்ல கோயில் கொண்டிருப்பவரு அருணஜடேஸ்வரர். அந்தக் கோயிலோட ஸ்தல விருட்சமே பனைமரம்தான். பனந்தாள்கள் நெறைஞ்ச அழகான கிராமம் திருப்பனந்தாள். 'பனசை'ன்னும் இந்த ஊரைச் சொல்வாங்க. எங்க முப்பாட்டன் காலத்துலேர்ந்து, எங்களுக்கு விசிறி பின்னுறது தான் பரம்பரைத் தொழிலு. இப்ப என் வூட்ல மனைவி, பிள்ளைங்கனு அஞ்சு பேரு இதுல இருக்கோம். வருசத்துல மூணு மாசம், எங்களுக்கு லீவு. ஐப்பசி, கார்த்திகை, மார்கழி தவிர, மீதி மாசங்களுக்கும் எங்களுக்கு இதுதான் வேலை.

நீங்க நெனைக்கலாம். 'ஒன்பது மாசமா தயாரிக்கற விசிறி, வித்துப் போய்டுதா?' வித்துப் போய்டுதுங்க. தேங்கி வைக்க இதுவரைக்கும் நேர்ந்தது இல்லை. கோடையில காத்து வேணும்னா, விசிறி தேவையா இருக்கு. மழைக் காலத்துல கொசுக்களை விரட்டி விட விசிறி தேவை இருக்கு. மேலும், திருப்பனந்தாள் விசிறி, தனி ஸ்டைலு. அதைச் செய்யற அழகே தனி. எங்களை நாங்களே உயர்வா நினைக்கக்கல. உண்மையத்தான் சொல்றோம்.

அஞ்சு வருஷத்துக்கு முன்னாடி, திருவாரூர் விக்கிரவாண்டி இருவழிச் சாலை வேலையப்ப, இருபத்திரண்டு கி.மீ. தூரத்துக்கு பனை மரங்கள் எல்லாத்தையும் வெட்டிட்டாங்க. ரொம்பக் கஷ்டமாப் போச்சு. மறுபடியும் பனங்கொட்டைகளைக் காலியிடமா பார்த்து ஊனி வெச்சு, பனைமரங்கள வளர்த்துவுட்டோம். தருமபுர

ஆதீன மடத்து இடங்கள்ல இருக்கற பனை மரங்கள்லேர்ந்துதான், நாங்க பனை யோலை வெட்றது.

பச்சை மட்டை வெட்டி வந்து காய வைக்கணும். தண்ணியில நனைச்சு படிய வைக்கணும். அதுக்கப்புறம் விசிறி சைஸுக்கு வெட்டணும். அதுல விளிம்புல பார்டர் மாதிரி அருகு தைக்கணும். விசிறி ரெடி. விசிறியில மூணு வகை இருக்கு.

சாதாரண விசிறிகள் சென்னை, நாகை, நாகூர், மயிலாடுதுறை, கும்பகோணம், தஞ்சை போன்ற நகரங்களுக்கு அனுப்பி வைக்கப்படுது. இஸ்லாமியத் திருமணங் களில் மாப்பிள்ளை அழைப்பின்போது, மாப்பிள்ளையின் மைத்துனர் கையில் வைத்து விசிறி வருவது மாப்பிள்ளை விசிறி. ஆலயங் களில் பயன்படுத்துவது பங்கா விசிறி. கோயில்களில் சுவாமி



**திருப்பனந்தாள்ல கோயில் கொண்டிருப்பவரு அருணஜடேஸ்வரர். அந்தக் கோயிலோட ஸ்தல விருட்சமே பனை மரம்தான்.**

சன்னிதியில் மூலவருக்கு விசிறி வுடுவாங்க. பார்க்கப் பிரம்மாண்டமாக இருக்கும். அளவுல பெருசு. எடுத்து விசுறுனா ஏகாந்தமா காத்து தவழ்ந்து வரும்.

காளியாட்டத் திருவிழாவுல, காளி வேஷம் கட்டி வர்ற பூசாரிக்கு வேர்த்து வேர்த்து வுடும். அப்ப இந்த பங்கா விசிறியால விசிறி வுடுவாங்க பூசாரிக்கு.

மதுராபுரியில் ஸ்ரீ கிருஷ்ணர் கோயிலுக்கு, வருஷத்துக்கு ரெண்டு பங்கா விசிறி இங்கேயிருந்துதான் செஞ்சு அனுப்பி வைக்கிறோம். பங்கா விசிறி எல்லோராலயும் செஞ்சுட முடியாது'' என்கிறார் திருப்பனந்தாள் மனோகரன். இந்த ஊருல, பதினைந்து குடும்பங்கள் செய்யற விசிறிதான் தமிழ்நாட்டு மக்களின் கையில் தென்றலைப் பிரசவிக்கிறது!

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

**30.05.2010 முதல் 05.06.2010 வரை**

## மேஷம்:

நல்லதே நடக்குற வாரமுங்க. சிலருக்கு உத்யோக உயர்வுண்டு; பூமி மூலமா ஆதாயம் கெடைக்குமாங்க. அது மட்டுமா, சிலருக்கு புள்ளெ பொறக்குற பாக்கியம் இருக்குதுங்க. வியாபார விஷயத்துல தூள் கௌப்பப் போறீங்க. ஏங்க, இந்த பத்திரிகைகள்ல உங்க பேரு வரப் போகுதாங்க. ஹூம், தூள் கௌப்புங்க! பணவசதியும் டக்கர்தான்!

## ரிஷபம்:

சங்கடம் தீருகிற வாரந்தாங்க. உங்க மனசுக்குப் பிடிச்ச சம்பவமெல்லாம் நடக்கும். கொஞ்சம் பேருக்கு பூர்விகச் சொத்து பங்கு கெடைக்கும். வேலைப் பளு கொறையும். பணக்கஷ்டம் தீர்ந்து போவும். ராகு/கேதுவ கும்புடுங்க! தீராத துன்பமெல்லாம் தீர்ந்து போவுங்க!

## மிதுனம்:

சூப்பரா வெளியூரெல்லாம் போவப் போறீங்க. கொஞ்சம் பேரு குலதெய்வத்தைப் பார்க்கப் போறீங்க. தொழிலெல்லாம் ச்சும்மா.. .செல்வாக்குதாங்க. சில பேருக்கு கடனெல்லாம் தீரப் போவுது! நண்பருங்க உதவப் போறாங்க! வர்ற சந்தோஷத்தை சொகமா அனுபவிங்க.

## கடகம்:

வாரமெல்லாம் டக்கருங்க! வீட்ல சுபகாரிய வார்த்தை மங்களமா நடக்கும்; வராத பணமெல்லாம் வசூலாவும். உற்றாரு உறவு உதவி பண்ணுவாங்க. வியாபாரத்துல லாபம் கொழிக்கப் போவுதுங்க. கூடவே, மகான்களின் ஆசி வேற கெடைக்குமாம். அப்புறம் என்ன, சந்தோஷம்தானே!

## சிம்மம்:

இந்த வாரம், லைஃபை கொஞ்சம் ஜாக்கிரதையா டீல் பண்ணுங்க. மறைமுகமா எதிர்ப்பெல்லாம் இருக்குதாம். உடம்பையும் கவனமா பார்த்துக்கங்க. சிலருக்கு பூர்விகச் சொத்துல, பாகப்பிரிவினையெல்லாம் வருமாம். சுபகாரியப் பேச்சு நல்லா நடக்குமாம். கடவுள் மேல பாரத்தைப் போட்டுட்டு, உஷாரா காரியங்களை கவனியுங்க! சனிபகவானை வழிபட்டா, எல்லாம் நல்லதே நடக்கும்!

## கன்னி:

சந்தோஷமான வாரந்தாங்க. கொடுக்கல் - வாங்கல் எல்லாம் சௌகர்யந்தான்! குடும்பத்துல குதூகலம் கூடுதுங்க. கடன் சுமை தீர்ந்து, பணவரவுக்கு பரமன் கியாரண்டி தர்றாருங்க! வெளியூர்லேந்து உங்களுக்கு விருப்பமான தகவல்கள் வந்து சேருமுங்க. வியாபாரத்துல வெற்றிதாங்க. ச்சும்மா வாழ்க்கைல கொண்டாடுங்க!

## துலாம்:

நல்லதும், கொஞ்சம் அல்லதும் கலந்து வரும் வாரம்னாலும் கவலையை விடுங்க. பெரிசா கஷ்டமெல்லாம் வராதுங்க. என்ன, கால்வலி, தலைவலின்னு... உடல் சற்று ஓய்வு கேக்கும். மத்தபடி வியாபாரமெல்லாம் செழிக்குமுங்க. சிலபேர் உத்தியோக உயர்வு வந்து சந்தோஷத்தைக் கொண்டாடுவாங்க. கவலை தீர, ஆஞ்சநேயரைக் கும்புடுங்க. அல்லல் எல்லாம் வெலகும்!

## விருச்சிகம்:

கொஞ்சம் உஷாரா இருக்க வேண்டிய வாரமுங்க. கடன் சுமை அதிகமாவுதுன்னு கிரகங்க சேர்க்கை சொல்லுது! யாருகிட்டேயும் வாக்குவாதம் பண்றதை தவிர்த்திடுங்க. குடும்பத்துல விட்டுக் கொடுத்துப் போங்க! அதே மாதிரி, வாகனங்கள்ல பிரயாணம் செய்யும்போதும் ஜாக்கிரதையா இருங்க. வேலை செய்யற எடத்துல, அதிகமா பளுவை சுமத்துவாங்க. ராகு/கேது



வழிபாடு செய்யுங்க. துன்பமெல்லாம் சட்டுன்னு விலகிப் போவும்.

### தனுசு:

நெனைச்சது நடக்குற வாரமுங்க. ஜாலியா என்ஜாய் பண்ணுங்க. பணவரவு தூள். வியாபாரம் டக்கர். குடும்ப உறவு சூப்பர். சிலருக்கு சொத்து வாங்கற யோகம். சிலருக்கு வெளிநாடு போற அதிர்ஷ்டம். சில பேருக்கு கடனெல்லாம் காத்தாப் பறந்துடும். அதாங்க, சுக்ர பகவான் அருள் சந்தோஷத்தை வாரி வழங்குறாருங்கோ!

### மகரம்:

ரொம்ப அற்புதமான வாரமுங்க! வியாபாரம் வெற்றிகரமா நடக்கும்; புதிய முயற்சிங்க பக்காவா நிறைவேறும். பணம் பல வழியில வருதுங்க. கடன் சுமை தீருதுங்க. குடும்பத்துல குதூகலத்துக்குக் கொறைச்சலில்லே. சில பேருக்கு, வெளியூர்ல இருந்து நல்ல தகவல் வருமுங்க! அனுபவிங்க, அற்புதமான சந்தோஷத்தை!

### கும்பம்:

சராசரியான பலன்கள் கிடைக்கிற வாரம்தான் என்றாலும் பொருளாதாரக் கஷ்டம் இருக்காதுங்க. வரவேண்டிய பணம் வந்து சேருமுங்க. கொஞ்சம் பேருக்கு வீடு மாற்றம் நிகழலாம். சிலருக்கு பூர்விகச் சொத்துல பாகப்பிரிவினை ஆகலாம். புதிய தொழில் முயற்சி பலன் கொடுக்குமுங்க. மொத்தத்துல முயற்சிகள் வெற்றியடையும் வாரம்!

### மீனம்:

வாழ்க்கைல உயர்வு தர்ற வாரமுங்க! பதவி உயர்வு, பணஉயர்வு, வியாபார உயர்வு... இப்படி நல்ல விஷயங்கள்ல உயர்வுதாங்கோ! சில பேரு வீடு/வாசல் புதுசா வாங்கப் போற யோகம் இருக்குதுங்க. குடும்பத்துல நல்ல காரியம் நடக்குற அதிர்ஷ்டம் வருதுங்க. உடம்பும் நல்ல ஆரோக்கியத்தோடு இருக்குமுங்க.






சிக்கிம் மாநிலத் தலைநகரின் பிரதான சாலை அது. மிகப் பெரியதாக இல்லாவிட்டாலும், பளிச்சென்று படுசுத்தமாக இருக்கிறது. அந்தச் சாலையில் எந்த வாகனத்துக்கும் அனுமதியில்லை. ஹாரன் ஒலியும் இல்லை. நடைபாதையில் செல்பவர்களும் மெல்லப்பேசிக் கொள்வதால், ஏதோ வெளிநாட்டின் நகர் ஒன்றிலிருக்கும் உணர்வைத் தோற்றுவிக்கிறது அந்த இந்திய நகரம். அந்தச் சாலையில் துப்பவோ, சுத்தமான சூழ்நிலையைப் பாதிக்கும் வகையில் ஏதாவது செய்தாலோ தண்டனை என அறிவிக்கப்பட்ட நம் நாட்டின் முதல் தூய்மைப்பிரதேசம் காண்டாக் நகரம்.

8000-மீட்டர் உயரத்தில் இமயத்தின் மடியிலிருக்கும் மாநிலம் சிக்கிம். இதன் குட்டித் தலைநகர் காண்டாக்.

பளிங்கு வெள்ளையாய்ப் பனிமூடிய கஞ்சன் ஜிங்கா சிகரத்தின் பின்னணியில் பரவிக்கிடக்கும் பசுமையை ரசித்தபடி, அந்த மலை நகரத்தில் இதமான குளிரில் நடப்பது சுகமாகயிருக்கிறது. மலைச்சரிவின் நடுவே ஒரு பெரிய கட்டடத்தினுள்ளே அமைந்திருக்கும் அழகான ஆர்கிட் வகை பூக்களுக்காகவே (பலநாட்கள் வாடாமலிருக்கும் வகை) நிறுவப்பட்டிருக்கும் தோட்டம்; அருகிலேயே நகரைப் பெருமைப்படுத்திய ஒரு நேப்பாளக் கவிஞரின் சிலையுடன் அழகிய பூங்கா. மக்கள் மாலைப்பொழுதை நகர போலீஸ் பேண்டின் இசையுடன் அனுபவிக்க காலரிகள் அமைக்கப்பட்ட பெரிய சதுக்கம். இப்படி எல்லாவற்றையும் நடந்தே நான்கு மணி நேரத்தில் சுற்றிப்பார்த்த பின், மறுநாள் ரும்டெக் என்ற வரலாற்றுச் சிறப்புமிக்க மிகப் பெரிய புத்த மடத்தையும் அங்கு

**ரமணன்**

நடைபெறும் திருவிழாவையும் பார்க்கத் தயாரானோம். இந்த ஊரில் இங்கு அனேகமாக எல்லாக் கடைகளிலுமே தலாய்லாமாவின்

படங்கள். அவரைக் கடவுளாகவே மதித்து வழிபடுகிறார்கள்.

நகருக்கு 23 கி.மீ.வெளியே ஒரு மலைச்சரிவில் வனப்பகுதியில் அமைந்திருக்கும் உயிரியல் பூங்காவின் அருகிலிருக்கும் அந்த புத்தமடத்துக்கு சென்ற மோசமான பாதை, நாம் இருப்பது இந்தியாதான். பார்க்கப் போவது ஒரு இந்திய கிராமத்தை தான் என்பதை உறுதிப்படுத்தியது. போகும் வழியெல்லாம் பல வண்ணங்களில் கொடிகள். அவை கட்சிக் கொடிகள் இல்லை, அத்தனையும் பிரார்த்தனைகளுக்காக என்பதையும்



# கனவில் வரும் பறக்கும் தொப்பி!

திருமணம், செல்வம், கல்வி, உடல் நலம் போன்ற ஒவ்வொன்றுக்கும் ஒரு வண்ணக்கொடி நடுவார்கள் என்பதையும் கைடு மூலம் அறிகிறோம்.

இங்கே பல நூறு ஆண்டுகளுக்கு முன் கடுந்தவம் செய்து அந்த மடத்தலைவர் தேவதைகளின் ஆசியுடன் பெற்ற இறகுத் தொப்பி அங்கேயிருக்கிறது. அதை அணிந்து கொண்டவர், எந்த இடத்துக்கும் பறக்கும் சக்தியைப் பெறுவார். மன்னரைவிட உயர்ந்த மடத்தலைவரான லாமா மட்டுமே அதை அணிய முடியும். இந்த மடத்தின் இன்றைய தலைவர் திபெத்திலிருக்கிறார். அவரோ அல்லது அவரது அடுத்த வாரிசோ வந்து அணிந்து கொள்வார்கள். அங்குள்ள தர்மசக்கரா புத்தமடத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட வர்கள், கடும் பயிற்சிக்கு பின்னர்தான் பிட்சுக்களாக அறிவிக்கப்படுவார்களாம். மெல்ல நடக்கும் நாம், பத்து நிமிடத்தில் மடத்தின் நுழைவாயிலைப் பார்க்கிறோம். கேரளக் கோயில்களின் முகப்பை நினைவுபடுத்தும் பக்கங்களில் நீண்ட இரண்டு திண்ணைகளுக்கு நடுவே

உயர்ந்து, சீனப் பாணி வண்ண ஓவியங்களுடன் நிற்கும் திறந்த மரக்கதவுகள்; நுழைந்தவுடன் நான்கு புறமும் மரக்கூரையுடனும் திண்ணையுடனும் தாழ்வாரம்; நடுவில் மிகப் பெரிய முற்றம். முற்றத்தின் நடுவே உச்சியில் விளக்குடன் உயர்ந்து நிற்கும் ஒரு கல் தூண். மறுகோடியில் திபெத்தியக் கட்டடக் கலையில் எழுப்பப்பட்ட நான்கு அடுக்கு மண்டபம். அடிக்கும் ஆரஞ்சு, சிவப்பு, மஞ்சள் வண்ணத் துணிகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. பூஜை துவங்கக் காத்திருக்கிறோம். "நடிகர் விஜய் படத்தின் குரூப் நடனக் காட்சிக்குப் போட்ட செட் மாதிரி இருக்கும் இந்த திறந்த வெளியில், என்ன பூஜை எப்போது செய்யப்போகிறார்களோ" என்று நாம் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்ட அருகிலிருந்த வெளிநாட்டுக்காரர் "அப்படியெல்லாம் கமெண்ட் அடிக்காதீர்கள். இது உலகத்தை துர்த் தேவதைகளிடமிருந்து காப்பாற்ற, அவர்கள் செய்யும் மிக முக்கிய பூஜை. குருவின் அனுமதிக்காகக் காத்திருக்கிறார்கள். கிடைத்தவுடன் துவக்குவார்கள்" என்கிறார். உங்களுக்கு எப்படித் தெரியும் என்ற தொனிதெரிந்த நம் பார்வையைப் புரிந்து கொண்டு "நான் இரண்டு வருடங்களாக ஆராய்ச்சி செய்து கொண்டிருப்பது இவர்களைப் பற்றிதான்" என்று அடக்கத்துடன் சொன்ன அந்த அமெரிக்கரைக் கண்டு ஆச்சரியப்பட்டேன். பின்பு, மரியாதையுடன் அறிமுகப்படுத்திக் கொண்டு அவர் அருகில் அமர்ந்து கொள்கிறோம். அவர் அமெரிக்காவில் அயவோ பல்கலைக்கழகப் பேராசிரியரான எரிக் ரீச்சர்ட்.


★ தலாய்லாமா

புத்தர் நிர்வாணம் அடைந்த பின், நூறு ஆண்டுகளில் புத்தமதத்தில் இருபதுக்கும் மேற்பட்ட பிரிவுகள் தோன்றின. அவற்றில் ஒரு முக்கிய பிரிவு கார்க்யூப்பா பிரிவு உலகில் எதையும் மந்திரத்தால் சாதிக்கலாம் என நம்புபவர்கள். தலைமைப்பீடம் திபெத்திலிருக்கிறது. சீன ராணுவம் அதை அழித்துவிடக் கூடும் எனக் கருதி அங்கிருந்து கொண்டு வந்திருக்கும் பல பூஜை, தந்திர ரகசியங்களுடன், தலைமைப்பீடத்தின் அச்சு அசலான மாதிரியில், அன்றைய சிக்கிம் அரசரின் ஆசியுடன், இந்த மடத்தை இங்கு



நிறுவியிருக்கிறார்கள். இது வெறும் மடம் மட்டுமில்லை. புத்த மதத்தின் தத்துவங்களைக் கற்பிக்கும் கல்விக்கூடம். குருகுல பாணியைப் பின்பற்றி பதினோராம் நூற்றாண்டிலிருந்து பாடங்களை வாய்மொழியாகவே கற்பிக்கிறார்கள். அவசியமானபோது மடத்தின் தலைவர் லாமா வருவார், எனப் பல தகவல்களைப் பேராசிரியர் எரிக் தந்தபோது, சந்தோஷமாகவும் வெட்கமாகவும் இருந்தது. சந்தோஷம் தெரிந்துகொண்ட பல விபரங்களுக்காக; வெட்கம், புத்த மதத்தை உலகுக்கு தந்தவர்கள் நாம்; ஆனால், அதன் பல விபரங்களை

ஒரு அமெரிக்கர் மூலம் அறிந்து கொள்ள நேர்ந்ததற்காக.

திடுமென உரத்து சங்கு ஒலிக்கிறது. மஞ்சள் ஆடை அணிந்த ஒரு மூத்த பிட்சு கையில் கொண்டுவந்திருக்கும் நீரை முற்றம் முழுவதும் மந்திர உச்சாடனங்களுடன் இரைக்கிறார். நடுவில் நிறுவப்பட்டிருக்கும் மேடைக்கு மாலை அணிவிக்கிறார். சில வினாடிகளில், பிரதான மண்டபத்திலிருந்து முற்றத்துக்கு நீலப் பட்டாடை அணிந்த குழு ஓடி வந்து நடனத்தைத் துவக்குகிறது. குழுவில் சிலர் விதவிதமான முகமூடிகள் அணிந்திருக்கின்றனர். அவை துர்த்தேவதைகளாம். இசையின் வேகம் அதிகரிக்க அதிகரிக்க அவர்களின் நடனம்



உக்கிரமாகிறது. மண்டபத்திலிருந்து வினோதமான வடிவில், தங்க வண்ணத் தொப்பியும் சிவப்பு ஆடையும் அணிந்த பிட்சுக்கள் கைகளில் பலவிதமான சரவிளக்குகளுடனும், சாம்பிராணி புகை கக்கும் குப்பிகளுடனும், அவர்களில் சிலர் ஷெனாய் போன்ற கருவியை இசைத்த வண்ணம் ஊர்வலமாக வருகிறார்கள். அவர்களுக்குக் காவலாகப் பெரிய தடிகளுடன் புத்த பிட்சுக்கள்! ருத்திர தாண்டவம் ஆடும் துர்த்தேவதைகளின் முன் கூடி நின்று மந்திர உச்சாடனம் செய்ய, பின் அவை ஒவ்வொன்றாக மயங்கி விழுகின்றன. இசையின் வேகம் குறைகிறது. பிரார்த்தனைக்குப்பின்னர், புத்த பிட்சுக்கள் மண்டபத்தின் உள்ளே செல்லுகிறார்கள். இசை நிற்கிறது. பூஜை முடிகிறது. தூண் உச்சியில் எரிந்து கொண்டிருந்த விளக்கு, கீழே ஒரு கவணிலிருந்து இருந்து லாகவமாக வீசப்படும் கவண் கல்லால் அணைக்கப்படுகிறது.

ஆயிரத்தொரு எண்ணிக்கையில் தங்க புத்தர்கள். நடுவில் பிரம்மாண்டமாக புத்தரின் சந்நிதி. அருகில் பிரார்த்தனைச் சக்கரங்களை உருட்டிக் கொண்டு பிட்சுகள், இளம் மாணவர்கள். சுவர்களில் திபெத்திய எழுத்துக்கள். பறக்கும் தொப்பி பற்றி விசாரிக்கிறோம். அடுத்த அறையைக் காட்டுகிறார் ஒரு துறவி. உள்ளே, பட்டுத் துணியால் மூடப்பட்டிருக்கும் ஒரு அழகான மரப்பெட்டி. "தொப்பியைப் பார்க்க முடியாதா?" என்ற நமது கேள்விக்கு, "எடுத்தவுடன் தலைவர் அணிந்து கொள்ள வேண்டிய அதை, அவர் இல்லாதபோது, எடுத்தால் பறந்துபோய் விடும் என்பதால் திறப்பதில்லை" என்ற அந்த இளம் துறவியின் பதிலைக் கேட்டு நமக்குச் சிரிப்பு எழுகிறது. தெய்வ சன்னிதானமாகப் போற்றப்படும் அந்த இடத்தின் சூழ்நிலை நம்மைக் கட்டுப்படுத்துகிறது.

மெல்ல இரவு பரவும் அந்தப் பொழுதில், காண்டக் நகருக்குத் திரும்புகிறோம். பறக்கும் தொப்பியைப் பார்க்க முடியாததைப் பற்றி அந்த கைடிடம் சொன்னபோது, "தொப்பி இருக்கும் விபரத்தைத்தான் சொன்னேனே தவிர, பார்க்க முடியும் என்று சொல்லவில்லையே!" என்ற அசத்தலான பதிலைச் சொன்னவர் "கவலைப் படாதீர்கள்!! இன்று இரவு கனவில் அதைப் பார்ப்பீர்கள்" என்றார்.

**நம்புங்கள்! அன்று கனவில் அந்தத் தொப்பி வந்தது.**

கலக்க வருதுப்பா

# கல்கி

ரீடர்ஸ் கெட் ரெடி

## விருதுநகர் மாவட்ட வாசகர்களே!

## இப்ப உங்க ஊருக்கே வருது கல்கி டீம்...

- உடனடித் தேவை?
- உங்கள் ஊர்ப் பெருமை?
- வாட்டம் தரும் வேதனை?
- அமைதி தரும் ஆலயங்கள்?
- பெருமைப்பட வைக்கும் தலைவர்கள்?
- மனசைச் சுத்திகரிக்கும் டூரிஸ்ட் ஸ்பாட்?
- கலை இலக்கியத்தில் உங்க மாவட்டத்தின் பங்களிப்பு?
- அடிப்படைத் தேவைகள் நிறைவேறிடுச்சா... இல்லையா?

வாசகர்களே...



உங்க மாவட்டத்தைப் பத்தி நீங்க அனுப்புற தகவல்கள்தான் கல்கி விருதுநகர் மாவட்ட ஸ்பெஷல் இதழ்களுக்கு அஸ்திவாரம்!

விவரங்கள் எதிர்ப்பக்கத்துல இருக்கு!

## விருதுநகர் மாவட்ட வாசகர்களே...

## கெட் ரெடி! கெட் ரெடின்னேன்!

**ஆ**மாம்! உங்கள் விருதுநகர் மாவட்டத்துக்கு 'கல்கி' டீம், நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்!

**சில சிம்பிள் கண்டிஷன்ஸ்...**

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்புகள் மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனிக் கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- விருதுநகர் மாவட்டத்தின் பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ். ஆன்மிக, வியாபார, சுற்றுலாத் தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன். சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல். நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ்... என்றவாறு, கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசித் தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கடிதங்கள் வந்து சேர வேண்டிய கடைசித் தேதி : 18.06.2010**



**கலக்க வருதுப்பா கல்கி**
**விருதுநகர் மாவட்டம்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்
☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32



**நீங்க ச்சும்மா கோடு போடுங்க...**
**நாங்க உடனே ரோடு போடுறோம்!**

எனக்குள்ள பல அடையாளங்களில் ஒன்றுதான் பாகிஸ்தானி. நான் பாகிஸ்தானில் பிறந்தவன். இரண்டாவது அடையாளம் முஸ்லிம் வீட்டில் - இனத்தில் பிறந்தவன். மாறிப் பிறந்திருந்தால், பாகிஸ்தானி இந்து, பாகிஸ்தானி சீக்கியன், அல்லது பாகிஸ்தானி கிறித்துவன் என ஆகியிருப்பேன்.''

''வேறுவிதமாய் உம்மை எவராவது கருதினால்?''

''புரியவில்லை.''

''நண்பரே! எவராவது உம்மை வேறு வகைப்படுத்தினால், நீர் ஒப்புக் கொள்வீரா?''

''எவர் எப்படி வகைப்படுத்துவார்?''

உருது மூலம் : பாகிஸ்தானி எழுத்தாளர்
**மஸ்ஊத் அஷ்யர்**

''சரி, விடும்! மேலே பேசும்!''

''இதுதான் உனக்குள்ள மூடத்தனம். குறுக்கே பேசி தடுமாற வைப்பாய். பழைய நண்பன்! பழைய மடத்தனம்! நீ மாறவில்லை.''

''சாரி, மை டியர் பிரண்ட்! இன்னும் என்ன அடையாளங்கள் உமக்கு உண்டு, சொல்லும்!''

''எனக்கு மட்டுமல்ல, உனக்கும், எல்லாருக்கும் உள்ளதுதான்.''

''என்னை விடும்! உன் அடையாளங்களைப் பற்றிப் பேசலாம்; நீர் பாகிஸ்தானி, முஸல்மான், அப்புறம்...?''

''ஆம். எனக்குள்ள மற்றொரு அடையாளம் 'ஜாட்' சாதிக்காரன். சாதிக்கும் மதிப்பு; மகத்துவம் உண்டு.''

''ஜாட் சாதி? சொலவடை உண்டே, 'ஜாட் ஆள் செத்தால் ஈமச்சடங்கின் இறுதிநாள் (பதின்மூன்றாம் நாள்) ஊரெல்லாம் கூடி ஆர்ப்பாட்டமாய்க் கொண்டாடும்' என்பார்களே, அந்த ஜாட்தானே?''

''ஆமாம். திமிரு பிடிச்ச முரட்டு மூர்க்க சாதி. என் பாட்டன் - முப்பாட்டன் சீக்கியர். அவங்க அப்பா இந்து. அதுக்கும் முன்னாலே பௌத்தராக இருந்திருப்பாங்க...''

''அதுக்கும் முன்னாலே வம்சாவளியிலே போம்! ஏன் நிறுத்தி விட்டீர்?''

''ஆமாம். அதுக்கும்



முன்னாலே? தெரியாது. என் வம்சாவளி இஸ்லாமியமானது பிற்காலத்தில்தான். ஆனாலும், என் நாடிநரம்புகளில், செயல்-சிந்தனைகளில் பழைய இனங்களின் தன்மை - தாக்கம் விரவியுள்ளது.''

''வம்சாவளிப் பேச்சு நீண்டு கொண்டே போகிறது.''

''சரி, விடு! உன்னை எடுத்துக் கொள். நீ

ஒரு 'ஷேக்' (நபிநாயகத்தின் வம்சத்தில் வந்த இனத் தலைவர்), இது பட்டப் பெயராகி விட்டது. இந்துவோ, சிக்கியனோ இஸ்லாமை ஏற்றுக் கொண்டபின், மதிப்பு அளிக்க

# அடையாளத்தை அழித்த குடை!

'ஷேக்' (நற்பிறவி) பட்டம் சூட்டப்படும்.''

''நண்பரே! பட்டமளிப்புக்கு நன்றி! உம்மைப் பற்றி மேலே சொல்லும்!''

''எங்கள் குடும்பம் குஜராம்வாலா பகுதியில் வசித்து வந்தது. பேச்சு மொழி பஞ்சாபி. பிறகு கராச்சிக்குக் குடிபெயர்ந்ததும் உர்து பேச்சு மொழியாகியது. பழகிய வழக்கு மொழியை மறக்கலாகுமா? இப்போது இங்கிலீஷ் எம்பேச்சு மொழி. இங்கே நான்...''

''நிறுத்திப் பேசுவீர் நண்பரே! எனக்குப் புரிதல் ஞானம் மந்தம்.''

''நையாண்டிக்கு இங்கே இடமில்லை. சரி, முதலிலே என் வம்சாவளி இந்தியாவில் இருந்தது. பிறகு...''

''அப்போ, இந்தியன் என்பதும் உமக்கு ஓர் அடையாளம்?''

**தமிழில் : சௌரி**

''மறுபடியும் குறுக்கீடு, மோசமான தவறு இது. பேச்சை முச்சூடும் கேட்டபின் கேள்வி கேள், பேசு!''

''சரி, நீர் ஆசியாக்காரன் தெற்காசியப் பிரஜை.''

''நீ வசித்த பேட்டை, தெரு, இல்லத்து இலக்கம் எல்லாம் சொல்லு!''

''என் அடையாளத்தைக் காணவா? அது நீளும்.''

''ஒரு அடையாளத்தைக் கூட உன்னால் தக்கவைத்துக் கொள்ள முடியவில்லை. இந்த இலட்சணத்திலே, பல அடையாளங்களைச் சுமந்து கொண்டிருக்கிறாய்!''

''இதுதானே நமக்கு இருக்கிற சிக்கல், பிரச்னை... சரி, உமக்கு உள்ள தற்கால அடையாளங்களைச் சொல்லும்.''

''பழைய மூட நண்பனே! என் தற்கால அடையாளம் - இக் கனடா நாட்டில்

குடியேறியுள்ள அந்நியப் பிரஜை, திறமையுள்ள சாஃப்ட்வேர் இன்ஜினியர்.''

''இது ஒரு அடையாளமா? இரண்டா?''

''இரண்டு. கூடவே மற்றொரு அடையாளமும் உண்டு. நான் கனடாவில் பாகிஸ்தானி ரெஸ்டாரெண்டில் 'ஹலால்' (பலியிட்ட கால்நடை இறைச்சி) உணவு சாப்பிடக் காத்திருக்கிறேன். இங்கு 'ஹலால்' முக்கிய அடையாளம்.''

''சரி, சரி. உம்முடன் தொலைதூரம் பயணித்து இங்கு வந்திருக்கிறேன். இந்தப் பயணமும் முக்கியமே. சரி, ஏன் இன்னும் ஆர்டர் கொடுக்கவில்லை?''



## பனியில் செய்த ரோஜா!

தண்ணீரில் நாட்டு ரோஜா இதழ்களைப் போட்டு மூடிவைத்து, கொதிக்க வைத்து ஒரு மணி நேரம் கழித்து வடிகட்டினால், ரோஸ் வாட்டர் ரெடி. இந்த வாட்டரை, ஐஸ் டிரேயில் போட்டு 'ஐஸ் கியூப்'புகளாகச் செய்து வைத்துக் கொண்டு, வெயிலில் களைத்து வரும் போது ஒரு கியூப்பை முகம், கண்களில் தடவி அலம்பினால், குளிர்ச்சியாக இருக்கும். குழந்தைகளுக்கு, இந்த ரோஸ் வாட்டரில் துடைத்துவிட்டால், உடல் நறுமணத்துடன் குளிர்ச்சியாக இருக்கும். குழந்தைகள் நன்றாகத் தூங்கும்.

- சியாமளா சுவாமிநாதன்.

''நீ பேசிக் கொண்டிரு. கொஞ்ச நேரத்தில் சூடான 'கபாப்', மசாலா மீன் பொரியல் வந்து சேரும். அங்கே பார்! பக்கத்து மேசையில் வெள்ளைக்கார வாலிபனும் இளம்பெண்ணும் உட்கார்ந்து ரசித்து 'கபாப்' சாப்பிடுகிறார்கள். இவர்களுடைய அடையாளமும் மாறியிருக்கும்.''

''என்னவெல்லாம்?''

''அவர்களைக் கேட்க வேண்டும்.''

''அதோ எதிரே ஒரு கட்டிடம் தெரிகிறதே, அதென்ன?''

''அது ஒரு பாகிஸ்தானியின் பிரபல பெரிய ஹோட்டல். முன்பு சிறு சிற்றுண்டிக் கடையாக இருந்தது. இப்போது இரண்டு மாடிக் கட்டிடத்தில் பெரிய பிரபல ஹோட்டலாகியிருக்கிறது.''

''அதோ பாரும் நண்பரே! ஹோட்டல் எதிரே, லாகூரில் ஓடும் ஆட்டோ ரிக்ஷா வைக்கப்பட்டிருக்கிறது. இதுவும் நமது அடையாளம்தானே?''

''இருக்கட்டுமே, சிறப்பு அடையாளம்.''

''சரி, நண்பரே! இந்தக் கனடா நாடு உமக்கு ஒரு அடையாளமாகுமா? இங்கும் உமது இனம்-மதம் சார்ந்தவர்களுடன்தானே உறவாடுகிறீர்? இங்குள்ள வெள்ளையர்களுடன் நீர் ஒன்றி வாழவில்லையே. இவர்களுடைய நல்லது - கெட்டதுகளில் பங்குபெறுவதில்லையே. பஜாரில், ஆபீசில் கொஞ்சம் இணைந்திருப்பதோடு சரி. இந்த அடையாளம் முக்கியப்பட்டதில்லையா?''

''............''

''அடுத்த விசயம், உம் நண்பன் கல்தான்கானின் மகள் ஜெமைக்கா நாட்டுக் கறுப்பனை மணந்து கொண்டாள். அப்பன்காரன் மகளை வெறுத்து ஒதுக்கிவிட்டான் - தானும் ஒரு கறுப்பு முஸ்லிமாக இருந்தும் கூட.''

''மடையா! முதல் விசயம், கல்தான்கான் என் நண்பன் இல்லை. இரண்டாவது, அவன் உன்னைப் போல ஒரே அடையாளத்தில் ஒட்டிக்

கொண்டிருப்பவன். அவன் மகள் பல அடையாளங்களை வரித்திருப்பாள் என்னைப் போல.''

''நண்பரே! எனக்குச் சிரிப்பு வருகிறது.''

''சிரிக்க வேண்டியது நான்.''

''அப்போ, நான் அழட்டுமா?''

''இது புத்திசாலித்தனம்.''

''நண்பரே! மேற்கொண்டு உமது திட்டங்கள் என்ன?''

''அதைவிடு! உன் தோழிகளைப் பற்றிப் பேசலாம்.''

''வெள்ளைக்காரி, கறுப்பி, மாநிறம், மஞ்சள்நிறம் - இப்படிப் பல வண்ணத்திகள். இவர்களுடன் என் அடையாளம்...?''

''மடையா! நான் கேட்கிறது அந்த இந்துமதக்காரியை. பார்க்கிறபோதெல்லாம் 'அஸ்ஸலாமோ அலய்கும்!'- என்பாளே, அவளை. நீதானே இதைக் கற்றுக் கொடுத்தாய்?''

''கூடவே, 'வாலேயகும் உஸ்ஸலாம்!' வாசகமும் சொல்லிக் கொடுத்தேன்.''

''அவள் உனக்கு என்னவெல்லாம் சொல்லிக் கொடுத்தாள்?''

''நிறைய்ய, விதம் விதமாய்.''

''தாயகம் திரும்பவா? ஹலால் மாமிசம் தின்னவா? அல்லது சாமியார்களைத் தரிசிக்கவா?''

''வேண்டாத பேச்சு. அதோ பாரும் எதிரே!''

''மழை பெய்கிறது.''

''மழையில் நனைபவர்களைக் கவனியும்.''

''அச்சா!... நம்ம மௌல்வி சாகேப் வருகிறார் - விரிச்ச குடைக்குள்ளே தலை சாய்த்து. பழமொழி ஞாபகம் வருது! -'அண்ணன் குர்த்தாவையும் தம்பி பைஜாமாவையும் வாங்கிப் போட்டுக்கிட்டால் சுகமாயிருக்கும்.' ஆனால் அங்கே கூட வருவது சல்வார் - பைஜாமா அணிந்த ஆரணங்கு.''

''கூட வர்றது யாருன்னு பாரும்!''

''சிக்கென டிரஸ்ஸில் கனடா வெள்ளைக்காரி.''

''மௌல்வி சாகேப் அப்பெண்ணின்



குடையின் கீழ் ஒண்டியிருக்கிறார். வெள்ளைக்காரி யுவதி மழையிலே நனைந்தபடி வந்தாலும், மௌல்வியார் குல்லாத் தலை நனையாமல் இருக்கிறது.''

''மடையா! குடையைக் கவனி!''

''ஆமாம், விரித்த குடை, அந்த வெள்ளைக்காரி கையிலே இருக்கிறது!'' ●

ஒன்பது வயசுல களிமண்ணுல் "கை வெச்சேன். அகல்விளக்கு, மண்பானை மூடி இதுகளதான் அப்ப செஞ்சேன். ஆறு வருஷம் இதுலயே உருண்டு புரண்டு எந்திரிச்சேன். பதினைஞ்சு வயசுலேந்து விதவிதமா செய்யத் தொடங்கினேன். இந்த மண்ணையும் என்னையும் எதனாலும் பிரிக்க முடியாது''என்கிறார் கண்ணன்.

நவீன உலகிலும், நம் மண்பாண்டங்களின் பயன்கள் தவிர்க்க முடியாதவை. பல வடிவங்களில் அவை நமக்கு உண்மையான சேவையாற்றி 'மாண்புமிகு' பட்டத்தைப் பெற்று விடுகின்றன. கும்பகோணம் அருகே மாத்தி கிராமத்தில் வசித்து வரும் மண்பாண்டக் கலைஞர் கண்ணனின் மண்பாண்டத் தயாரிப்புத் தளத்தில் நாம் நிற்கிறோம். மனித நிழல் எந்தப் பக்கம் நிலத்தில் வீழ்ந்தாலும், மண்பாண்டக் குவியல்களின் மீது தான் விழ வேண்டும். அந்தளவு பலவகை மண்பாண்டங்கள்.

சாதாரண மண் பானை தொடங்கி, சித்த வைத்திய மருந்து தயாரிக்கிற வாளைப்பானை வரைக்குமாக, நூற்றுக்கும் மேற்பட்ட வகை கள்ல மண்பாண்டங்கள் செஞ்சு வெச்சிருக்கேன். கண் திருஷ்டி பொம்மை வேணும்னு வர்றவங்களும் உண்டு. ஒரு வீட்ல பசுவோட கன்னுக்குட்டி செத்து போச்சு. மண்ணுலயே கன்னுகுட்டி செஞ்சு குடுனு ஒருத்தர் வந்தாரு. செஞ்சு தந்தேன். பணம் கொடுத்தாரு. நா வாங்கிக்கல,'' என்று சொல்லும் கண்ணனிடம், காலத்துக்கு ஏத்தமாதிரி மண் பாண்டத்துல புதுசா ஏதும் உண்டா? என்றோம்.

'இருக்கே! குடிநீர்ப் பானை. புதுசும் பழசும் சேர்ந்த கலவை! திருகினா தண்ணி வர்றாப்ல பைப் வைச்சு. அந்தப் பானைக்கு அடியிலே, அகல சைசுல தண்ணீர்க் காலவை. அதுல தண்ணி ஊத்தி வைக்கணும். எறும்புகள் அண்டாது. மேலும், அதுக்கும் மேல இருக்கற குடிநீர்ப் பானை தண்ணி எப்பவும் ஜில்லுனு இருக்கும்.

# "மாண்புமிகு" மண்பாண்டங்கள்!



கோடைக் காலங்கல்ல இந்தக் குடிநீர்ப் பானைக்கு செம வரவேற்பு. அடுத்து சிறந்த தயாரிப்பு, குளிர் சாதன மண் பானை! பெரிய பானை. விளிம்புக்குக் கீழே தண்ணி ஊத்த ஒரு சின்ன மண் குழாய். சிறிய பானை. இதனை பெரிய பானைக்கு உள்ளே வைக்கணும். பானைக்குள் பானைமாதிரி ரெண்டுக்கும் இடையே உள்ளடக்கமா இடைவெளி இருக்கும். அந்த இடைவெளிக்கு தண்ணி விட்டு நிரப்பணும். இரண்டு மூடி. நாம உள்ளே வைக்க வேண்டிய பொருள வைச்சு மூடிடணும். காய்கறிகள் ஒரு வாரம் கெடாமல் இருக்கும். இட்லி தோசை மாவு மூணு நாள் கெடாது. புளிப்பு ஏறாது. மாவு பதமா இருக்கும். குளிர்சாதன மண் பானை, சேத்தி கிராமம் வந்து நேர்ல வாங்கிக்கணும். பத்திரமா பார்சல் அனுப்ப இயலாது.''



- கண்ணன்

'மண்பாண்ட இட்லி கொத்தும் உண்டு என்கிறார் கண்ணனின் மனைவி வாசுகி. அதுக்கொரு மண் கலய ஸ்டாண்ட். இட்லி பானை (அலுமினியம் அல்லது சில்வராகவும் இருக்கலாம்)யில தண்ணீர். அது நடுப்புற சின்னதா மண் கலய ஸ்டாண்ட். அது உள்ளே கொஞ்சம் வைக்கோல். அந்த ஸ்டாண்ட் மேல, நாலு இட்லி ஊத்தி வெக்கறாப்பல மண் பாண்ட இட்லி கொத்து. அதுல வெள்ளைத் துணி விரிச்சு மாவு ஊத்தி, மூடி வெச்சா ட்டா... ஆவி உபயத்தால இட்லி ரெடி. அம்புட்டு ருசி!'' என்கிறார்.

வெயிலைப் பூசிக்கிட்டு வெளையற இந்த மண்பாண்டங்கள், கோடைக்கு மட்டுமல்ல; கோடையைக் கடந்து வரும் காலங்களுக்கும் உடல் நலம் சேர்ப்பவை. மண்பாண்ட நீர் குடித்து, மண்பாண்ட பிரிட்ஜில் பொருள் வைத்து, மண்பாண்டத்தில் இட்லி அவித்து சாப்பிட்டு, இயற்கையோடு கொஞ்சம் இணைந்தால், நம்ம வாழ்வும் 'மாண்புமிகு' தான்.

- இருள்நீக்கியான்





மகள்: துளசிலெஷ்மி

'நெருநல் உளனொருவன் இன்றில்லை
என்னும்
பெருமை உடைத்துஇவ் வுலகு'
- திருக்குறள்

நான் தில்லியில் இருந்தபோது, சபர்வால் என்ற ஓர் அயல் நாட்டுப் பத்திரிகை நிருபர் என் நண்பராக இருந்தார். வயதான தோற்றமுடைய அவரை நான் முதல் தடவை என் மற்றொரு நண்பர் மூலம் சந்தித்தபோது, அவர் என்னைக் கேட்டார்: 'என் வயது என்ன என்று நினைக்கின்றீர்கள்?'

நான் சொன்னேன்: 'எனக்கு யூக விளையாட்டுகள் விளையாடத் தெரியாது'

அவர் சொன்னார் : 'ஐந்து'

எனக்கு ஒன்றும் புரியவில்லை. 'என்ன சொல்லுகிறீர்கள்?'

'ருடால்ஃப் எஹரன்பெர்க் படித்திருக்கிறீர்களா?' என்று அவர் கேட்டார்.




'இல்லை'

'மனிதன் வயதைப் பிறந்ததிலிருந்து எத்தனை ஆண்டுகளாய் அவன் இருந்து வருகிறான் என்று கணக்கிடக் கூடாது என்று அவர் சொல்லுகிறார். இன்னும் எத்தனை ஆண்டுகள் அவன் சிந்தனையினால், சரீரத்தினால், மனித சமுதாயத்துக்காகச் செயல்பட முடியும் என்று வைத்துதான் கணக்கிட வேண்டும். என்பது அவர் கருத்து. அதன்படி என் வயது ஐந்து. காலெண்டர் கணக்கின்படி எண்பது...' என்றார் சபர்வால்.

# வாழ

இந்தக் கணக்கு வயதானவர்களுக்கு நம்பிக்கை அளிப்பதாக இருக்கிறது. அறுபது வயதுக்காரர், தம் வயதை இருபது என்று சொல்லலாம். எண்பது வயதுக்காரர் ஐந்து என்று சொல்லலாம். அவ்வாறு சொல்வதே அவர்களுடைய உளவியல் ஆரோக்கியத்துக்கு உவந்ததாய் இருக்கும்.

மனிதன் பிறக்கும்போது, அவனுக்குள் ஆற்றல்களின் சாத்தியப்பாடுகள் அனைத்தும், வெறும் மூலப் பொருள்களாக இருக்கும். பிறகுதான் இவை கொஞ்சம் கொஞ்சமாகக் கல்வி, அனுபவம், சூழ்நிலை ஆகியவற்றால் கட்டமைப்புக்களாக உருப்பெறுகின்றன. மூலப் பொருள்கள் அனைத்தும் பயன்படுத்தப்பட்ட நிலையில், மரணம் நிகழ்கின்றது. இதுதான் உளவியல் அறிஞர் ஃப்ராய்டின் கருத்து.

மனிதன் சாக விரும்புவதில்லை. சாகா மருந்துக்காகப் பாற்கடலைக் கடைந்த நாளிலிருந்து இன்று வரை, மனிதன் மரணத்தை எதிர்கொள்ள மறுப்பதின் விளைவுதான் மெய்ஞ்ஞான, விஞ்ஞானத் தத்துவங்களின் வரலாறு.

நசிகேதஸ், யமலோகம் சென்று, மரண தேவதையாகிய யமனையே, 'நிரந்தர உண்மை



இந்திரா பார்த்தசாரதி

# ...தூண்டும் மரணம்!

என்பது எது? சிரஞ்சீவியாக இருப்பது எப்படி' என்று கதோபனிஷத்தில் வினவுகிறான். யயாதி மஹாபாரதத்தில் தன் பிள்ளை களிடம் தன் முதுமையை வாங்கிக் கொள்ள முடியுமா என்று கேட்கிறான். அவ்வாறு முதுமையை வாங்கிக் கொள்ளும் பிள்ளையாகிய புரூ, பிறகு, இளமையை மீண்டும் பெற்றதோடு மட்டுமல்லாமல், நாட்டாட்சியையும் போனஸ்ஸாகப் பெறுகிறான். (அவவாறு முதுமை என்பது மாற்றிக் கொள்ள வல்லது ('transferable') என்றால் இக்காலத்தில் பல அரசியல் பிரச்னைகள் தீர்வதற்கு வழி இருக்கிறது.)

சில விஞ்ஞானிகள், மனிதன் வயதா வதற்குக் காரணமான மரபணுவை(gene) கண்டுபிடித்து, மனிதனுக்குச் சாவே வராமல் வாழச் செய்ய முடியுமா என்று ஆராய்ச்சி செய்து வருகிறார்கள். இப்படி இறப்பை முறியடித்து விட்டால், புதிய பிறப்பும் இல்லாமலிருந்தால்தான், பூமாதேவி மஹா விஷ்ணுவிடம் பூமி பாரத்தைப் பற்றிக் குறை சொல்லும்படியான அவசியம் இருக்காது.

இறப்பது என்பது தவிர்க்க முடியாத இறுதி முடிவானால், நாம் தினந் தோறும் 'வாழ்ந்து' கொண்டிருக்கிறோமா, அல்லது முடிவை நோக்கிச் செல்வதினால், தினந்தோறும் 'செத்து'க் கொண்டிருக்கிறோமா என்ற கேள்வி எழுகிறது. அதனால்தான், 'இருத்தலிய வாதிகள்' (Existentialists), 'பிறப்பு ஓர் அபத்தம், இறப்பது அதைவிட ஓர் அபத்தம்' என்கிறார்கள். மரணம் என்பது ஓர் இறுதியான உண்மை என்று மேலைய நாட்டுத் தத்துச்வங்களின் முடிவு என்பதால், பிறப்பும் இறப்பும் அபத்தமானது என்று அவர்கள் கருதுவதில் ஆச்சர்யமில்லை.

ஆனால், இந்தியத் தத்துவ மரபின்படி, சரீரத்துக்குத்தான் சாவே தவிர,








ஆத்மாவுக்கில்லை. 'மரணம்' என்பது ஒரு நிலையே தவிர, இறுதி முடிவன்று.

இந்தப் பிறவியில், ஒரு கோட்பாட்டை வகுத்துக் கொண்டு, கடவுள் என்ற கருத்து உன் ஆற்றல்களின் எல்லை என்று தெளிந்து, அந்த எல்லையை நோக்கி நீ பயணம் செய்தால், 'காலனை உன் காலருகே' (பாரதி)அழைப்பதற்கான மனத் துணிவு உனக்கேற்படும். 'நமனை அஞ்சோம்', (அப்பர்) 'நரகத்தை நகு நெஞ்சே'(நம்மாழ்வார்) 'சாதலும் புதுவதன்றே' (கணியன் பூங்குன்றன்) என்றெல்லாம் பாட முடியும்.

> **'நாளென ஒன்றுபோற் காட்டி**
> **உயிரீரும்**
> **வாளது உணர்வார்ப் பெறின்'**
> **-என்கிறது குறள்.**




ஒரு பெரிய வாள் இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். அது கண்ணுக்குத் தெரியாத கூர்மையான வாள். உலகிலுள்ள ஒவ்வொரு உடம்பும் அந்த வாளின்கண். தொடர்ந்து வெட்டப்பட்டுக் கொண்டே வருகிறது. அறுபடுவதும் நம் கண்ணுக்குத் தெரியவில்லை. ஒரு நாள், உயிர் இல்லாமல் போகும்போதுதான், கண்ணுக்குத் தெரியாத வாளில், உடம்பு தொடர்ந்து அறுபட்டுக் கொண்டே வந்திருப்பது நமக்குத் தெரிகிறது.

இந்த வாளின் பெயர் 'காலம்'; இந்தக் 'காலம்' என்ற உருவமற்ற வாள் 'நாள்' என்ற மயக்கத்தைத் தோற்றுவிக்கின்றது. அவ் 'வாளில்' அறுபட்டுக் கொண்டிருக்கின்றோம் என்று உணராமல், பொழுது இன்பமாகக் கழிகின்றது என்று மகிழ்பவர் பலர். இவ்வாறு 'அறுபடுவதை' உணர்பவர் சிலர்தான். அவர்கள்தாம், மரணத்தை வெல்ல வாழ்க்கையில் குறிக்கோள்களை வகுத்துக் கொண்டு பிறருக்குப் பயன்பட வாழ்கிறார்கள். 'உணர்வார்'ப் பெறின்' என்பதில், 'பெறின்' என்பது உணர்வார் அருமையைக் குறிக்கும்.

'இருத்தலியல்வாதத்தின்' பிதாமகனாகிய சாத்ரே, 'இவ்வாறு வகுத்துக் கொள்ளும் வாழ்க்கையில் நான் மரணத்தையும் கடந்து நிற்பேன்' என்கிறார். ஒரு பொருள் அதன் நிழலினால் ஒளி பெறுவது போல், மரணத்தைப் பற்றிய நினைவுதான், இந்த வாழ்க்கையின் அருமையையும் பெருமையையும் நமக்கு உணர்த்தி, நம் ஆற்றல்களின் எல்லையை நோக்கி நம்மைப் பயணம் செய்யத் தூண்டும்.

பெரும்பான்மையோர், சராசரி விலங்கு நிலை வாழ்க்கையையே

சொர்க்கம் (phistinic paradise) என்று நினைத்து வாழ்கிறார்கள்.

> *'தேடிச் சோறுநிதம் தின்று-பல*
> *சின்னஞ் சிறுகதைகள் பேசி-மனம்*
> *வாடித் துன்பம்மிக உழன்று- பிறர்*
> *வாடப் பல செயல்கள்செய்து-நரை*
> *கூடிக் கிழப் பருவமெய்தி - கொடும்*
> *கூற்றுக்கு இரையெனப்பின் மாயும்-பல*
> *வேடிக்கை மனிதரைப் போலே-நான்*
> *வீழ்வேன் என்று நினைத்தாயோ?'*

என்ற பாரதியின் வரிகளில் காணும் தர்ம ஆவேசத்தைப் பார்க்கும்போது, மனித வாழ்க்கையின் மகத்துவம் நமக்குப் புரியும்.

பாரதியின் சொல்லாட்சியில் வரும் 'கூற்று' என்ற வார்த்தையைக் கவனியுங்கள்.

'கூறு' என்றால் 'பிரி' என்ற பொருள். காலன் (யமன்) வாழ்க்கையை ஒரு நிலையிலிருந்து இன்னொரு நிலைக்குப் பிரிக்கின்றானே தவிர, அடியோடு ஒழித்து விடவில்லை. யமனுக்குத் தமிழில், 'காலன்' (Time & god), 'கூற்று' (The Great Divider') 'அறம்' (தர்ம ராஜன்; பாதையை வகுப்பவன்) என்று பல பெயர்கள் உள்ளன.




**மரணத்தைப் பற்றிய பிரக்ஞைதான் மனிதனின் வாழ்க்கை நிரலை நிர்ணயிக்கின்றது**

திருமழிசை ஆழ்வார், 'சாதல் இன்று வரலாம் அல்லது நின்று வரலாம். சாதலை வெல்லும் வழி, ஈரடியால் மூவுலகு அளந்த திருவிக்கிரமனை நினைத்தலே ஆகும்' என்கிறார்.

அதாவது, உன் கோட்பாடு பிரபஞ்சம் அளாவியதாக இருக்க வேண்டும் என்று அர்த்தம். இந்தப் பயணத்தில் சாதலைப் பற்றி நினைத்தல் ஓர் அற்பமான விஷயம்.

'மனிதனின் முயற்சி அவன் கைப்பிடியைத் தாண்டியதாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால், சொர்க்கம் எதற்காக இருக்கிறது?' ("Man's reach should exceed his grasp, or what is Heaven for?") என்றார் ராபர்ட் ப்ரௌனிங். இங்கு 'கைப்பிடி' என்பது மரணத்தை உருவகிக்கின்றது. 'வெள்ளத்தனைய மலர் நீட்டம் மாந்தர்தம் உள்ளத்தனையது உயர்வு' என்பது குறள். 'உள்ளம்' என்றால் இங்கு 'முயற்சி' என்று அர்த்தம்.

மரணத்தைப் பற்றிய பிரக்ஞைதான் மனிதனின் வாழ்க்கை நிரலை நிர்ணயிக்கின்றது.

(அடுத்த வாரம் நிறைவுறும்)



# உன் பெயர் புகழ்!

ஏர்வாடி எஸ்.இராதாகிருஷ்ணன்

பூக்களுக்குத் தனித்தனியே பெயர்கள் வைத்தோம்
பட்டுவிட்டால் சருகென்றே அழைப்போம்; பாடும்
பாக்களுக்கு இலக்கணத்தின் வகையை யொட்டிப்
பாவினங்கள் மாறுபடும். பிழையென் றாலோ
பாக்களல்ல; உயிரற்ற புழுக்கை யாகும்.
பாய்ந்துவரும் நதிகள் பல பெயரால் ஓடும்
தேக்கிவிட்டால் அணையாகும்; கடலிற் சேர்ந்தால்
தனித்தனியே பெயரில்லை கடலென் றாகும்.

காய்களுக்குப் பல்வேறு பெயர்கள் கண்டோம்
கனிகளுக்கும் அவ்வாறே; அழுகிப் போனால்
காய்அல்ல, கனிஅல்ல; அழுகல் குப்பை.
கடவுளுக்கும் பலபெயர்கள் நம்பி னால்தான்.
நோய்களுக்கு எத்தனையோ பெயர்கள்; ஆனால்
நோயாளி என்பதவை வாழும் இல்லம்.
நாய்களுக்குப் பெயர்வைப்போம் கோபம் வந்தால்
நாயென்றே திட்டுகிறோம் பெயரால் அல்ல.

உறவுகளில் எத்தனையோ உண்டு எல்லாம்
உள்ளவரை; இல்லையெனில் இல்லை தானே!
நிறத்துக்கும் பெயருண்டு சாயம் போனால்
நிறமேது? முடிவுஒரு வெண்மை தானே.
பறவைகளில் பலவிதங்கள் பார்ப்போம்; யாவும்
பறக்காமல் சிறகொடிந்தால் பாவம் என்போம்.
பிறந்துவிட்டால் மானுடர்க்குப் பெயர்கள் நூறு
போதாத குறைக்குமேலும் பட்டம் வேறு.

உயிர்போனால் பெயரேது பட்ட மேது...?
உயிரோடு பெயர்போகும். தலையி ழிந்த
மயிர், கூந்தல் எனும்பெயரை இழந்தாற் போல
மனிதரிங்கே சவமாகிப் போவர்; ஆனால்
உயர்ந்தோர்கள் உலகிலிங்கே அவ்வா றல்லர்
ஒருபோதும் பெயரழிவு புகழுக் கில்லை.
பெயரழியாப் புகழ்வேண்டும் என்றால் மாந்தர்
பயன்படவும், பண்படவும் வேண்டும் என்பேன்.

★ 'ஞாநி'யின் உரை

# வெளிக்காற்று உள்ளே வரட்டும்!

எங்கெங்கு காணிலும் கோடை வகுப்புகள் என அனலடித்துக் கொண்டிருக்கும் சூழலில் வசந்தகால வானவில் அனுபவமாய், நான்கு நாள் இலக்கியப் பயிலரங்கினை நடத்தியுள்ளது, திருச்சி எஸ்.ஆர்.வி. மெட்ரிகுலேஷன் மேனிலைப்பள்ளி. அதனைப் பயனுள்ள பயிலரங்கமாக வடிவமைத்திருந்தனர், பல துறைகளின் முன்னோடிகள். ''அப்படி என்ன... கத்துக்கிட்டீங்க?'' என மாணவ மாணவியரிடம் கேட்டபோது...



''போன வருஷம் ஐ.ஏ.எஸ். தேர்ச்சி பெற்றவரு மதுரை வீரபாண்டியன். அவர் தமது பேச்சில் மதுரையில நைட்டு டிபன் கடையில வேலை பார்த்தது பத்தி ரொம்ப உருக்கமா எங்கள்ட்ட கலந்துரையாடினாரு. அத்தனை கஷ்டத்துலயும் அவர் நல்லா படிச்சு வந்திருக்கும் போது, பொருளாதாரச் சிரமம் இல்லாத குடும்பத்துலேந்து படிக்கிற நம்பளால ஏன் முடியாது?னு எனக்குள்ளே கேள்வி பிறந்தது'' - யோகபரசுகன்.

''பேச்சுப் போட்டியில பங்கேற்கிறது எனக்குப் பாயசம் மாதிரி, பேச்சாளர் நந்தலாலா, 'பேசுவது வாய்ப்பழக்கம்'னு தலைப்புல பேசினாரு. மேடையில இன்னும் ஜோரா எப்படி பேசறதுனு கத்துக்கிட்டேன்!'' - சிவரஞ்சனி





தமிழ்ல வார்த்தைகளை எப்படி உச்சரிக்கறதுனு தமிழ்ச் செல்வன் பேச்சு. அதை அப்படியே பதிவு செஞ்சு நம்ப

தொலைக்காட்சி அறிவிப்பாளர்கள் மற்றும் நிகழ்ச்சி வர்ணனையாளர்களுக்கு அனுப்பி வைக்கலாம்னு தோணிச்சு!''

- இந்திரஜித்.



* தனுஸ்ரீ

''ரொம்ப மோசமான ஆளை 'அவன் ஒரு காட்டான்'னு திட்டுறோம். 'காட்டுப் பய'னு வைபறோம். ஆனா, காடு ரொம்ப உன்னதமானது, உயர்வானதுன்னு தன்னோட பேச்சால எங்களுக்குப் புரிய வெச்சாரு, 'காடு வாவா என்கிறது' தலைப்பில் பேசிய சூழ்நிலை இயலாளர் முகமது அலி.



''சினிமாவும் தமிழ் சினிமாவும்னு பேசினாரு அஜயன் பாலா. பராசக்தி, அவள் அப்படித்தான், உதிரிப்பூக்கள், பதினாறு வயதினிலே, அழகி, ஆட்டோகிராப், சேது, முள்ளும் மலரும், வெண்ணிலா கபடிக் குழு, அங்காடித் தெரு ஆகியன தமிழின் மிகச் சிறந்த பத்து திரைப்படங்கள் எனக் குறிப்பிட்டார். அந்தப் பத்து படங்கள்ல அவள் அப்படித்தான், முள்ளும் மலரும் தவிர மீதி எட்டு படங்களைப் பார்த்திருக்கேன். மிச்ச அந்த ரெண்டு படத்தையும் பார்த்திடுவேன்!''

- பிரகாஷ் கண்ணன்.

''பெண் நிலையில்'னு பேச வந்தவங்க ஏ.எஸ்.பத்மாவதி. கல்யாணத்துக்கப்புறம் ஒரு ஆணுக்கும் பெண்ணுக்கும் கிடைக்குற புது விஷயம் என்னனு கேட்டாங்க. டக்குனு ஒரு மாணவன் எந்திரிச்சு சொன்னான், 'கல்யாணத்துக்கப்புறம் ஒரு ஆணுக்குப் புதுசா ஒரு அம்மா - அப்பா கிடைக்குறாங்க. ஒரு பெண்ணுக்கும் புதுசா ஒரு அம்மா - அப்பா கிடைக்குறாங்க'னு. அரங்கிலே கைத்தட்டல் அடங்க அஞ்சு நிமிஷம் ஆச்சு!''



* வர்ஷா

''கதை உருவாகும் நுட்பங்கள் பற்றி எழுத்தாளர் பாஸ்கர் சக்தி எடுத்துரைத்தார். அதைக் கேட்டு இப்ப நானே கதை எழுதத் தொடங்கிவிட்டேன்!''

- ஜெகு டைடஸ்.



''கல்வெட்டில் அறிஞர் இரா.கலைக் கோவன் கோயில் சிற்பங்களின் கலையழகு பத்தி கதை கதையா சொன்னாரு. கோயிலுக்கு போறப்ப இப்ப நானும் அந்தச் சிற்பங்களைப் பார்த்து ரசிக்கிறேன்!''

- செண்பகராஜன்.



''கிராமத்தை நோக்கிய பயணமாக நாங்க போனது பாடாலூர் பக்கத்துல ஊத்தங்காடி கிராமம். அங்க ஜோதிங்கறவங்க தனி மனுஷியா உழைக்கப் போராடி, ரெண்டு மகன்களையும் படிக்க வெச்சிருக்காங்க. இப்போது ஜோதிக்கு மகன்களால் எந்தப்





# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 2010

**முதல் பரிசு ரூ.10,000/-**

**இரண்டாம் பரிசு ரூ.7,500/-**

**மூன்றாம் பரிசு ரூ.5,000/-**

**கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 15.**
**மேலும் விவரங்களுக்கும், விதிமுறைகளுக்கும் சென்றவார இதழைப் பார்க்கவும் அல்லது அடுத்த இதழில் காணவும்.**

**-ஆசிரியர்**

பயனும் இல்லை. பையனைப் படிக்க வைக்க வாங்கின இரண்டு லட்ச ரூபாய் கடனை, பூ வித்து அடைச்சு வர்றாங்க. அந்தம்மாவோட கண்ணீர்க் கதைய கேட்டு வந்த அன்னைக்கு இரவு எனக்குத் தூக்கமே வரலை!'' -மனோகரி.

**அ**திக மதிப்பெண் பெற வைப்பது மட்டும் அல்ல. சமூக நலன் மீது நாட்டம் மிகுந்தோராக உருவாக்குவதும் எங்கள் கடமை. அதற்காகவே 'கனவு மெய்ப்பட' என்கிற தளத்தில் மாதந்தோறும் சொற்பொழிவு நடத்தி வருகிறது, பள்ளி நிர்வாகம்!'' - என்றார் நிர்வாகத் தலைவர் ராமசாமி.

"...இதற்கு முத்தாய்ப்பாக 'வெளிக்காற்று உள்ளே வரட்டும்' என்கிற நோக்கில் நிகழ்த்தப்பட்டதே இந்த நான்கு நாள் பயிலரங்கு!'' - என்பது செயலாளர் சுவாமிநாதனின் கருத்து.

''நல்ல மதிப்பெண், நல்ல திறன், நல்ல மனிதம் இவற்றை மாணவ மாணவியரிடமிருந்து வெளிக்கொணர்வதே எங்கள் இலக்கு. குறிப்பிட்ட இரண்டு புத்தகங்களை, அவர்கள் அவசியம் வாசிக்க வேண்டுமென வாய்ப்பு நேரும்போதெல்லாம் சிபாரிசு செய்து வருகிறோம். ஒன்று, மகாத்மா காந்தியின் சத்திய சோதனை. இன்னொன்று, அமரர் கல்கியின் பொன்னியின் செல்வன்!'' என்கிறார்கள் இணைச் செயலாளர் சத்தியமூர்த்தியும் பள்ளி முதல்வர் துளசிதாசனும்.

''அவர்கள் அவசியம் வாசிக்க வேண்டுமென வாய்ப்பு நேரும்போதெல்லாம் சிபாரிசு செய்து வருகிறோம். ஒன்று, மகாத்மாகாந்தியின் சத்திய சோதனை. இன்னொன்று, அமரர் கல்கியின் பொன்னியின் செல்வன்!''

செய்தி, சித்திரம் : ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

## நூல் அறிமுகம்




# சஞ்சயப் பார்வை

உலகின் நன்மையின் பொருட்டு இறையைப் பிரார்த்திப்பது உத்தமம். தமது நியாயமான தேவையை நிறைவேற்றக் கோரி மகாசக்தியிடம் மண்டியிடுவது மத்திமம் என்று பிரார்த்தனையை நம் மரபு வகுத்திருக்கிறது. மத்திமத்தை காஞ்சிப் பெரியவர் முதற்கொண்டு அதன் நேர்மையின் பொருட்டு ஆதரித்து வந்துள்ளனர். பிரார்த்தனை மூலம் நமக்கு வளம் அளிக்கவல்ல 21 ஸ்தலங்களைத் தேர்வு செய்து, கோபுரத்தைத் தாங்கும் அஸ்திவாரமாய், கால காலமாய் நம் பார்வைக்கு வராத வைரம் பாய்ந்த ஆதி வரலாற்றை, கோயில் பெருமைகளை, தீபாராதனையின்போது பரவசப்படுத்தும் கர்ப்பகிரகத்து ஸ்வாமியின் ஆனந்த தெனத்தை, சேவிக்கும் பாங்குடன் சொல்லிச் செல்கிறார் இந்நூலில் எழுத்தாளர் சீதா ரவி.

ஸ்தலங்களின் அகத்தை மட்டுமின்றிப் புறமாய் இருக்கும் இன்றைய சமூகத்தின் நிலையையும் உறுத்தலின்றிப் பொறுப்புணர்வுடன் 'கறந்த பால் கன்னலோடு நெய் கலந்தாற்போல்' சொல்லிச் செல்வது ஆசிரியரின் மனச்செம்மையின் பிரதிபலிப்பு. உதாரணத்திற்கு... கோடைக் காலங்களில் ஆழ்வார்திருநகரில் பெருமான் ஆதிநாதருக்கு முகம் மட்டுமே தெரியும்படி தைலக்காப்பு ஏன்? அதன் விஞ்ஞான மறைபொருளை விளக்குவதும்... திருப்புடைமருதூர் நாறும்பூநாதரின் கீர்த்தியைக் கல்வெட்டுச் சான்றுடன் சொல்லி, நாதரை சேவிக்க வசதி செய்து தந்த நீதிபதி ரத்னவேல் பாண்டியரை ஞாபகத்தில் பதித்து விட்டு, அவ்வூர் மக்களைக் கௌரவித்து விடுவதும்...

திட்டமிடலின்றி சட்டெனச் சாமானியன் பயணிக்க முடியாத திருத்தலங்களை, மகா பாரதத்தில் யுத்தக் காட்சிகளை ஆன்மிக பலத்தோடு உடனுக்குடன் காட்சிப்படுத்தி நேரடி ஒலிபரப்பை நிகழ்த்திய சஞ்சயனைப் போல எழுத்தின் மூலம் தரிசிக்க வைத்து 'தெளிவே வடிவாம் சிவஞானம் என்றும் சேர்நலமனைத்தும் ஓங்கி வருகின்றன காண்' என, பக்தர்கள் கொண்டாடும் நூலாய் அமைந்துள்ளது.

சீதா ரவி

சுவாமி விமூர்த்தானந்தரின் ஆசியுரையுடன் கூடிய இந்நூல், இறைவனை நோக்கி உங்களைச் செலுத்துவதற்கு வழி காட்டுகிறது.

**வளம்தரும் கோயில்கள், ஆசிரியர் சீதா ரவி, வானதி பதிப்பகம், 23, தீனதயாளு நகர், தி.நகர், சென்னை-17. விலை ரூ.60.00 - 170 பக்கங்கள்.**

**- அமிர்தம் சூர்யா**

ஒரு நாடு, ஒரே சமயத்தில் வேறு இரண்டு நாடுகளின் பிடியில் தொடர்ந்து இருக்குமா? ஏதோ சரித்திரத்தின் பழைய பக்கத்தில் காணப்படும் செய்தி அல்ல இது. இன்றும் அதற்கு உதாரணமாக விளங்குகிறது அன்டோரா.

பிரான்சுக்கும் ஸ்பெயினுக்கும் நடுவே அமைந்துள்ளது அன்டோரா. இப்படி அமைந்ததுதான் அதன் பலம் மற்றும் பலவீனம்.

ஒருவிதத்தில் அன்டோரா பிரமிக்க வைக்கிறது. கொஞ்சநஞ்சமல்ல, எக்கச்சக்கமான சுற்றுலாப் பயணிகள் (நூறு லட்சம் பேர்) வருடாவருடம் தவறாமல் அன்டோராவுக்கு வருகிறார்கள் என்றால் அதற்குக் காரணம் உண்டு. இயற்கை வளம் கொட்டிக் கிடக்கிறது அங்கு. அரண் போல நாட்டைச் சுற்றியிருக்கும் மலைகள். அடைய முடிகிற, அழகு கொஞ்சும் சிகரங்கள், சறுக்கு விளையாட்டுக்கு மிக வசதியான சீரான மேடு பள்ளங்கள் மற்றும் வளைவுகள்.

## அன்டோரா




அன்டோராவில் பிரெஞ்சு மொழியை சகஜமாகப் பேசுவார்கள். ஸ்பானிஷும் சரளம்தான். ஏன் போர்த்துகீசிய மொழியைக் கூடப் பலர் பேசுகிறார்கள். ஆனால் ஆட்சி மொழி அந்தஸ்து கேடலான் (catalan) என்பதற்குத்தான். கேடலோனியா என்ற பகுதி ஸ்பெயினில் உள்ளது. அங்கு அதிகமாக பேசப்படும் மொழிதான் அன்டோராவின் ஆட்சி மொழி!

அன்டோராவே ஒரு அணுவைப் போன்ற குட்டி நாடு. ஆனால் அதுவும் ஏழு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

# ராணுவமில்லாத



ஒவ்வொரு பிரிவையும் 'பாரிஷ்' (parish) என்கிறார்கள்.

நாட்டின் தலைநகரம் அன்டோரா ட வெல்லா. இதன் பொருள் 'தொன்மை யான அன்டோரா' என்பதாகும். பதிமூன் றாம் நூற்றாண்டிலேயே உருவான நகரம். 1023 மீட்டர் உயரத்தில் அமைந்த நகரம் இது (ஐரோப்பாவின் மிக உயர்ந்த தலை நகரம்).

தனக்கென்று ஒரு விமான நிலையம் கூட இல்லாத நாடு அன்டோரா. மூன்று மணி நேரம் பயணம் செய்தால், பிரான் ஸிலோ ஸ்பெய்னிலோ உள்ள விமான நிலையத்தைப் பயன்படுத்திக் கொள்ள லாம், அவ்வளவே.

முதலாம் உலகப் போரின்போது (1914-இல்) அன்டோரா ஜெர்மனியின் மீது போர் அறிவிப்பு செய்தது. ரொம் பவும் துணிச்சலான அல்லது வேடிக்கை யான அறிவிப்பு இது. காரணம், அன்டோராவின் அப்போதைய ராணுவம் என்பது வெறும் பத்து ராணுவ வீரர்கள் மட்டுமே. அவர்களும் பகுதி நேர ராணுவ வீரர்கள். ஆக அறிவிப்போடு சரி. போரில் அன்டோரா கலந்துகொள்ள வில்லை. வியப்பு என்னவென்றால், இன் றைக்கும் அன்டோராவுக்கு ராணுவம் கிடையாது. அதைப் பிற நாடுகளிட மிருந்து காக்க வேண்டியது பிரான்ஸ் மற்றும் ஸ்பெய்னின் பொறுப்பு!

இந்த நிலை தோன்றியது ஒருவிதத் தில் காலத்தின் கட்டாயம் எனலாம்.

இருபதாம் நூற்றாண்டுத் தொடக்கத்தி லிருந்தே, ஸ்பெயின் தேசம் அரசல்



* மிகச் சிறிய நாடுகள் பட்டியலில் இடம் - 42

மிகக் குறைவான மக்கள்தொகை கொண்ட நாடுகளில் இடம் - 39

(உலகின் மொத்த நாடுகளின் எண்ணிக்கை 233)

* ஒரு வழியாக 1993-ல் ஐ.நா.வில் உறுப்பினராகியிருக்கிறது. ஐரோப்பியக் குழுவிலும் இப்போது உறுப்பினர்.

* வருடத்தில் 300 நாட்கள் சூரியக் கதிர்கள் படும்.

* மனிதனின் ஆயுள் மிக அதிகம். சராசரியாக 82 வருடங்கள்.

* விவசாயம் குறைவுதான். மொத்த நிலப்பரப்பில் இரண்டு சதவிகிதம்தான் விவசாயத்துக்கு உகந்தது. அந்த அளவுக்கு மேடு பள்ளமான பகுதிகள். இருக்கும் நிலத்தில புகையிலை விளைச்சல் வேறு!

* மக்கள்தொகை வெறும் 83,000தான். (1900ல் ஐந்தாயிரம் பேர்தான் வசித்தனர்)

* அன்டோராவில் உள்ளூர்வாசிகள் மைனாரிடிதான். அதிகம் வசிப்பது ஸ்பானியர்கள்தான். அடுத்தது போர்த்துகீசியர்கள். பிறகு, பிரெஞ்சுக்காரர்கள்.

* பதினாறு வயது வரை கல்வி கட்டாயம், இலவசம். நாட்டில் ஒரே ஒரு பல்கலைக்கழகம்தான்.

## ஆயுள் இங்கு அதிகம்!

புரசலாக அன்டோராவின்மீது ஆளுமை செலுத்திக் கொண்டிருந்தது. 1933-ல் பிரான்ஸ் அன்டோராவை ஆக்ரமித்தது. அதற்கு அடுத்த வருடமே ஸ்பெயினிலிருந்து கிளம்பினார் ஒருவர். தன்னை முதலாம் போரிஸ் என்று அறிவித்துக் கொண்ட அவர், இனி தானே அன்டோராவின் அரசர் என்றும் கூறிக் கொண்டார். அவசர அவசரமாக அவரைக் கைது செய்து நாடு கடத்தியது ஸ்பெயின் அரசு. பின்னர் தானும் அன்டோரா மீது உரிமை கொண்டாடியது.

இரண்டாம் உலகப் போரின்போது அன்டோரா நடுநிலை வகித்தது. அப்போது, அன்டோராவை பிரான்ஸும் ஸ்பெயினும் வேறொரு விஷயத்துக்காகத் தாராளமாகவே பயன்படுத்தின. இரு நாடுகளுக்குமிடையே நிலவிய முக்கிய கடத்தல் பொருட்களின் பாதையாக அன்டோரா விளங்கியது.

வேறெந்த நாட்டிலும் இல்லாத அதிசயமாக அன்டோரா மேற்படி இரு நாடுகளின் ஆளுமையில் இருப்பது இப்படித்தான். தேர்தல் நடத்திக் கொள்ளவும் தங்களில் ஒருவரைப் பிரதமராக்கிக் கொள்ளவும் அன்டோராவுக்கு உரிமை உண்டு. ஆனால், நாட்டுக்கு இரண்டு 'நிரந்தரத்' தலைமைகள். ஒருவர் பிரான்ஸின் ஜனாதிபதி. மற்றவர் ஸ்பெய்னில் உள்ள உர்கெல் (ஸ்பெயினில் உள்ள கடலோனியா என்ற பகுதியில் உள்ளது உர்கெல்) எனும் பகுதியின் பிஷப். ஆக இந்த இரண்டு நாடுகளும் அன்டோராவோடு பின்னிப் பிணைந்து அரசியல் நடத்தி வருகின்றன.

பல காலமாகவே அன்டோரா தனக்கே உரியது என்று பிரான்ஸும் ஸ்பெய்னும் உரிமை கொண்டாட, குரங்குகளின் கையில் அகப்பட்ட மாலை போல, அன்டோரா ஆகிவிடுமோ என்ற அச்சம் உள்ளூர் தலைமைக்கு ஏற்பட, ஒரு வழியாக இரு நாடுகளுக்கும் இடையே ஒரு உடன்படிக்கை உண்டானது. இதன்படி இந்த இரண்டு நாடுகளுக்கும் வருடாவருடம் அன்டோரா மாறிமாறிக் கப்பம் (பெஸ்டியா) செலுத்த வேண்டும். இப்படி இரு நாடுகளின் தலையீடு தொடர்ந்து இருப்பதால், அன்டோராவை 'கோ

ரின்ஸிபாலிடி' Co&principality என்று அழைக்கிறார்கள்.

அன்டோராவின் தேசிய தினம் செப்டெம்பர் எட்டு. அதுதான் அன்டோராவின் காவல் தெய்வமான (Patron saint) Lady of Meritxell எனும் வடிவத்தில் உள்ள கன்னி மேரியின் தினம். இவரின் மிகப் பெரிய சிலை ஒன்று பனிரெண்டாம் நூற்றாண்டிலிருந்தே இருந்து வந்தது. ஆனால் 1972-வில் ஏற்பட்ட பெரும் தீ விபத்தில் இது அழிந்து விட்டது. அதற்குப் பிறகு



## "அன்டோராவில் வருமான வரியே கிடையாது."

அதே போன்ற வேறொரு சிலையை உருவாக்கினார்கள். மக்களில் 90 சதவிகிதம் ரோமன் கத்தோலிக்கப் பிரிவைச் சேர்ந்தவர்கள். என்றாலும் அதிகாரபூர்வ மதம் என்று எதுவும் கிடையாது என்பது விசேஷம்.



அன்டோராவில் வருமான வரி எவ்வளவு செலுத்தவேண்டும் என்று கேட்டால், அங்கு சம்பாதிப்பவர்கள் மிகவும் சந்தோஷத்துடன் இட வலமாகத் தலை ஆட்டுவார்கள். ஆம், அன்டோராவில் வருமான வரியே கிடையாது. இதன் காரணமாகவும் வெளிநாட்டு முதலீடுகள் இங்கு தாராளமாகச் செய்யப்படுகின்றன.

நாடு உள்ள தனிமைப் பகுதியால், ஐரோப்பிய சரித்திரத்தின் ஒரு பகுதியாக இல்லாமல் தனித்தே இருந்து வந்திருக்கிறது அன்டோரா. பிரான்ஸ், ஸ்பெயினோடு மட்டும்தான் தொடர்பு. ஐரோப்பிய யூனியனில் அன்டோரா உறுப்பினர் அல்ல. (என்றாலும் அன்டோராவின் நாணயம் யூரோதான்!). இப்படி அன்டோரா தனிமையானதற்கு அதன் மிகச் சிறிய அளவு ஒரு காரணமென்றாலும்- பிரான்ஸ், ஸ்பெயின் ஆகியவை பிற நாடுகளுடன் தொடர்பு கொள்ளாதபடிக்கு அன்டோராவை 'அன்பினால்' கட்டிப் போட்டன எனலாம்.



**(வாமன தேசங்கள் தொடர் நிறைவடைகிறது)**

"பசுமையான சென்னை நகரம் குறித்து இப்போது மக்கள் மத்தியில் விழிப்புணர்ச்சி ஏற்பட்டிருப்பதைக் காண முடிகிறது'' என்கிறார் சென்னையில் இயங்கி வரும் ''நிழல்'' என்ற தன்னார்வத் தொண்டு நிறுவனத்தின் நிர்வாக அறங் காவலர், ஷோபா மேனன். அவருடன் உரையாடியதிலிருந்து...

''நகர்ப்புறங்கள் காங்க்ரீட் காடுகளாகி வருகின்றன. அதை மாற்ற பசுமை குறித்த விழிப்புணர்ச்சியை மக்கள் மத்தியில் ஏற் படுத்துவது, மரம் வளர்ப்பதை அதிகரிப் பது, இருக்கும் மரங்களைப் பாதுகாப்பது போன்ற நோக்கங்களுக்காக ஆரம்பிக்கப் பட்டதுதான் நிழல். இது சென்னை நகரத் தின் பல்வேறு பகுதிகளிலும் சில தன்னார் வத் தொண்டர்களைக் கொண்டுள்ளது.''

''மாதந்தோறும் முதல் ஞாயிற்றுக் கிழமை ''ட்ரீ வாக்கிங்'' என்று ஒரு நடைப்பயணம் நடத்துகிறோம். ஒவ் வொரு முறையும் ஒரு குறிப்பிட்ட இடத் தில் காலை ஏழு மணிக்கு நடை துவங் கும். பொடி நடையாக அந்தப் பகுதியில் நடைபயணக் குழுவினர் நடந்து செல்வார் கள். கூட வரும் தாவரவியல் நிபுணர் ஒவ்வொரு மரம், செடியைப் பற்றியும் பல விஷயங்களைச் சொல்லிக் கொண்டே வருவார். சந்தேகங்களுக்குப் பதில் சொல்லுவார். அந்த உரையாடலில், நடந்து வருகிற மற்றவர்களும் பங்கேற்று சில அரிய விஷயங்களைப் பகிர்ந்து கொள்வதுண்டு. உதாரணமாக ஒரு முறை புங்க மரம் பற்றிச் சொல்லிக் கொண்டி ருந்தபோது, ஒரு பெண்மணி, 'புங்க மர நிழலில் படுத்திருப்பது, அம்மா மடியில் படுத்திருப்பது போல'' என்ற ஓர் கன்ன டப் பழமொழியை நினைவு கூர்ந்தார்.

''பல்வேறு பள்ளிக்கூடங்களுக்கும் சென்று வகை வகையான மரங்களைப் பற்றியும், மரங்களைப் பாதுகாக்க வேண் டிய அவசியத்தைப் பற்றியும், ஏதேதோ மரங்களை வளர்க்காமல், நம் சொந்த மண்

# வெயிலில் தெரியும்...


ஷோபா மேனன்



# பொது இடங்களில் உள்ள மரங்களை வெட்டுவதைத் தடை செய்யச் சட்டம் வேண்டும்.

ணுக்குரிய பாரம்பரிய மரம், செடிகளை வளர்க்க வேண்டும்; அந்தக் காலம் போல பறவைகளும், வண்ணத்துப்பூச்சிகளும் அவற்றில் வந்து அமர்ந்து எழில் சேர்க்க வேண்டும்'' என்றெல்லாம் எடுத்துச் சொல்கிறோம்.

தமிழ்நாடு சிறைத்துறையின் தலைவராக நட்ராஜ் ஐ.பி.எஸ். இருந்த சமயம், புழல் சிறையில் இருக்கும் கைதிகளில் ஆர்வமுள்ள ஐம்பது பேருக்கு, தோட்டக் கலைப் பயிற்சி அளித்தோம். சிறையிலிருந்து விடுதலையடைந்த பிறகு, அவர்கள் வருமானம் ஈட்ட உதவுவதுதான் இந்தப் பயிற்சியின் நோக்கமாக இருந்தது. ஆனால், பயிற்சி பெற்ற சிறைவாசிகள் முயற்சியால், சிறை வளாகத்திலேயே குண்டும், குழியுமாக, புதர் மண்டிக்கிடந்த பெரிய இடம் ஒன்று அற்புதமான காய்கறித் தோட்டமாக மாறியது. அடுத்து இந்த முயற்சி, வேலூர் உள்ளிட்ட இன்னும் சில தமிழ்நாட்டின் சிறைச்சாலைகளிலும் செயல்படுத்தப்பட உள்ளது.

''எங்களுடைய இன்னொரு பிரசாரம் ''மரங்களைக் காப்பாற்றுவோம்''. சென்னை நகரத்தின் மரங்கள் பலவற்றில் பலரும் தங்கள் விளம்பரத் தகடுகளைப் பொருத்தி ஆணிகள் அடிக்கிறார்கள். மாநகராட்சி சட்டப்படி, இப்படி செய்வது தண்டனைக்குரிய செயலாகும். மேலும், மரங்களில் இப்படிக் கணக்கில்லாமல் ஆணிகள் அடிப்பதால், காலப்போக்கில் அந்த மரங்கள் பாதிக்கப்பட வாய்ப்புண்டு. எங்கள் வாலண்டியர்கள் ஏணி, சுத்தி சகிதம் சாலைகளில் வலம் வந்து, மரங்களில் ஆணி அடித்துப் பொருத்தப்பட்ட விளம்பரத் தகடுகளைப் பெயர்த்து எடுத்து, அந்தப் பகுதியில் உள்ள மாநகராட்சி அலுவலகத்தில் ஒப்படைத்து விடுவார்கள்.

மேலும், எத்தனை மரக்கன்றுகளை நாம் நடுகிறோம் என்பது முக்கியமில்லை; அவற்றில் எத்தனை பிழைக்கின்றன? அவற்றை நாம் எப்படிப் பராமரிக்கிறோம் என்பதுதான் முக்கியம். ஐநூறு கன்றுகள் நட்டு, அவற்றில் நூறு உயிர் பிழைத்து, ஒரு வருடம் கழித்து பத்து மட்டும்தான் இருக்கின்றன என்பதைவிட, பத்தே பத்து கன்றுகள் நட்டு, அவற்றை ஒரு வருடம் வரை அக்கறையுடன் பராமரித்து வந்தாலே போதும். அதன் பிறகு, அவை தானே வளரும்.

''சென்னையில் பல்வேறு காரணங்களுக்காகவும் பொது இடங்களில் உள்ள மரங்களை வெட்டுவது அதிகமாகி வருகிறது. இப்படி மரங்களை வெட்டுவதைத் தடைசெய்யும் சட்டம் மகாராஷ்டிரா, டெல்லி போன்ற மாநிலங்களில் உள்ளது. அப்படி ஒரு சட்டத்தை இங்கும் கொண்டு வரவேண்டும்'' என்கிறார் ஷோபாமேனன்.

சந்திப்பு : **எஸ்.சந்திரமௌலி**

# வண்ணங்களில் வசியமாகும் வாழ்வு!



மகாராஷ்டிர ஓவியக் கலைஞன் சுதிர் எஸ்.பங்கர் விசேஷமானவர். 73-ல் பிறந்த இவர் தனித்துவம் வாய்ந்த பதினான்கு ஓவியக் கண்காட்சிகளை இந்தியா முழுவதும் நிகழ்த்தியவர். "தொலைந்து கொண்டிருக்கும் கிராமங்களின் குணாதிசயங்களை ஆவணமாக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ளேன். அவர்களின் வாழ்க்கையை வண்ணங்களில் வசப்படுத்திக்



* சுதிர் எஸ்.பங்கர்

கொள்ள, அரை அருபவ பாணியில் (செமி அப்ஸ்ட்ராக்) அயராது தூரிகையால் வலை வீசுகிறேன்.

அதில் அகப்பட்டதுதான் இந்தக் கலை மீன்கள். வறட்சியைத் தரும் சூரியனைக் கூட வாழ்த்தும் இவர்களின் குளிர்ந்த ஆன்மா, இந்தப் பூமிக்கே உரிய பொக்கிஷம். எந்த வெளிநாட்டுக்குப் போனாலும், என் வேர் இந்திய கிராமம் தான்'' என சிலாகிக்கும் இக்கலைஞன், ஏழு முறை அரசு விருதுகளைப் பெற்றவர். ஓவியத்தை மட்டுமின்றி நாடகத்தையும் முறையாகப் பயின்றதால், திரைக்கதை இன்றியே காட்சிகள் பேசும் கலையைக் கைப்பற்றியிருக்கிறார்.

செய்தி : அமிர்தா

புகைப்படங்கள் : சின்னராஜ்




**● அனன்யா, திருச்சி**

**கடவுளின் வீட்டிற்கு வழிகாட்டிய கிரேசியே, அப்படியே "சாத்தானின்" வீட்டிற்கும் வழி சொல்ல முடியுமா....?**

சாத்தானுக்கு "யாதும் வீடே..... யாவரும் CLIENTடீர்"!

**● ரம்யா, சென்னை**

**'லைலா' புயலால ஜில் க்ளைமேட்டை அனுபவிச்சீங்களா....?**

அட போங்கம்மா.... ஆசை காட்டி மோசம் பண்ணிட்டா லைலா.... 'லைலா' போச்சு! பழையபடி பொசுக்குற 'வெய்லா" ஆச்சு....!

**● ச.ஆதிகேசவன், கோவில்பட்டி**

**தொழிலாளிகளுக்கு 'மே-தினம்'... முதலாளிகளுக்கு....?**

தொழிலாளிகளுக்கு மே-தினக் கொண்டாட்டம்.... இப்ப இருக்கிற ரிஸஷன்ல முதலாளிகளுக்கு "PAY-தின"த் திண்டாட்டம்....!

**● நெல்லை.த.ஞான செல்வன்**
**பிரியம்மாள்புரம்**

**செக்ஸ் கல்வி பற்றி தங்கள் கருத்து என்ன....?**

'சொல்லித் தெரிவதில்லை செக்ஸ் கல்வி'!

**● எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்**

**தமன்னாவுக்கு அப்பாவாக நீங்கள் நடித்தால்....?**

தமப்பாவாகி விடுவேன்....!

**● ரா.பிரசன்னா, மதுரை**

**கண்ணாடியில் முகம் பார்ப்பது, தண்ணீரில் முகம் பார்ப்பது.... என்ன சார் வித்தியாசம்....?**

கண்'ஆடி'யாக இருந்தாலும் பிம்பம் ஆடாமல் இருக்கும்... தண்ணீரில் பார்க்கையில், 'தான் ஆடா விட்டாலும் தன் பிம்பம் ஆடும்'!

**● ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி**

**அழகுக்கு எது இலக்கணம்....?**

இன்றைய இலக்கணம் ZERO&SIZEக்கு இளைக்கணம்....!

**● ச.ராஜசேகர், செய்யாறு**

**மூடநம்பிக்கை என்பது என்ன....?**

அதிர்ஷ்டம் கதவைத் தட்டும் என்ற அசட்டு நம்பிக்கையில், வாய்ப்பு என்ற வாசலை மூடி விட்டுத் தூங்குவது மூட நம்பிக்கை....!

**● க.கோபிபச்சமுத்து, கிருஷ்ணகிரி**

'நீர்' உய

**உங்களுக்குப் பிடிக்காத 'பூ'....?**

'பூ' இவ்வளவுதானா? என்று சொல்லும் சிலரின் காழ்ப்'பூ'!

**● L.மோகனசுந்தரி, புதுப்பேட்டை**

**முருகப்பெருமானிடம் உங்களுக்குப் பிடித்த குணம்....?**

'முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைப்பான் முருகன்' என்று கந்தர் அலங்காரத்தில் அருணகிரி சொன்ன குணம்....!

**● சுகுமார், சென்னை**

**மனிதனுக்கு ஆடை அணியும் வழக்கம் எப்போது தோன்றியிருக்கும்....?**

'காட்டு மிராண்டியாய்' இருந்த மனிதன் நாகரீக வளர்ச்சியால் மிரண்டு நாணமுற்று 'காட்டா மிராண்டியாய்' ஆன

காலத்தில்....!

● எம்.அசோக்ராஜா, திருச்சி

**மிருகங்களுக்கும் ஆன்மீக உணர்வு உண்டா....?**

விலங்குதான் விடுதலையை விரும்பும். ரமணர் சன்னிதியில் காகமும், பசுவும், குரங்கும் தவம் செய்திருக்கிறது....!

● லலிதா, விழுப்புரம்

**ஆண்டவனுக்கும் விளம்பரம் தேவையா....?**

விளம்பரம் என்ற வார்த்தையிலேயே 'பரம்' இருக்கிறதே....!

● கே.ராஜலட்சுமி, ஹூப்ளி

**கல்லுக்குள் ஈரம் உண்டு என்கிறார்கள். சொல்லுக்குள்?**

சாரம் உண்டு. சாரம் இல்லாத சொல் ஈரம் இல்லாத கல்!!

● சி.ஆர்.நாகராஜன், பொள்ளாச்சி

# நான் உயரும்!

**சாமியாரில் எத்தனை வகையுண்டு?**

வகையைச் சொல்லி நான் வகையாக மாட்டிக் கொள்ள விரும்பவில்லை....!

● மு.மதிவாணன், அசூர்

**மனிதனுக்கு ஐந்தறிவும், மிருகங்களுக்கு ஆறறிவும் இருந்திருந்தால்....?**

இந்த மாசம் மிருகங்கள் கேட்கும் கேள்விகளுக்கு எல்லாம் நான் 'MAY MAY' என்று முனகியிருப்பேன்....!

● அ.ராஜா ரஹ்மான், கம்பம்

**உங்கள் உயரம் எவ்வளவு?**

கேள்வி கேட்கும் 'நீர்' உயர பதில் சொல்லும் 'நான்' உயரும்!

● மா.இராசன், சென்னை

**'போதும் போதும்' என்பதற்கும், 'வேணும் வேணும்' என்பதற்கும் என்ன வித்தியாசம்....?**

'போதும் போதும்' என்பது பொன் செய்யும் மருந்து. 'வேணும் வேணும்' என்பது புண் செய்யும் விருந்து!

● ராகினி, பெங்களூர்

**உங்கள் குரு கட்டை விரலைக் கேட்டால் கொடுப்பீர்களா....?**

கட்டை விரலைக் கொடுக்க நான் அந்தக் கால 'ஏகலைவன்' அல்ல. கட்டை விரலால் செல்லில் மெசேஜ் அனுப்பும் இந்தக்கால 'மோகலைவன்' ●



ஜில்லுன்னு ஜோரா சாப்பிடுவது எப்படி? பார்ப்பதற்கும் ப்யூட்டி, நாவிலும் டேஸ்டி, வயிற்றில் ஊட்டி... என்ற ரேஞ்சில், ஏதேனும் ஒரு உணவு வகை இருக்குமானால், அது 'சாலட்' மட்டுமே. நம்முடைய தினசரி உணவில் காய்கறி களை நிறையச் சாப்பிட வேண்டும் என டாக்டர்கள் சொல்கிறார்கள். (500 ரூபாய் ஃபீஸ் வாங்கிக் கொண்டுதான்!)

ரெகுலராக சாலட் சாப்பிட்டால் ரத்த ஓட்டத்தில் வைட்டமின் சி. இ. ஃபோலிக் ஆஸிட், பிட்டா கரோட்டின்... போன்ற சமாச்சாரங்கள் ஹையாக இருக் கும்.

சாலடில் போடப்படும் ஆலிவ் ஆயில், சோயா ஆயில்... போன்றவையால் நம் ஆயுள் கூடும்.

சரி, சாலட் என்றால் என்ன? கலர் கலராகக் காய்கறிகளைத் தேர்ந்தெடுத்து அதைப் பொடிப்பொடியாகவோ, வில்லை களாகவோ, துருவியோ, ஒரு பவுலில் போட்டு, இதில் உப்பு, மிளகுப் பொடி, லெமன் ஜூஸ் போட்டுக் கிளறி... இது பேஸிக் சாலட்.

சாலடில் பல வகை... கார்டன் சாலட் என்று சொல்லப்படும் வகையில் லெட்டூஸ், வெள்ளரி, தக்காளி, குடை மிளகாய், காரட்.... என்று காய்கறிகள் வகை வகையாக. 18-ம் நூற்றாண்டி லிருந்தே சாலட் புழக்கத்தில் இருந்திருக் கிறது. பதினாலாம் லூயிஸ் சொன்னது என்னவென்றால், ''என்னை நம்பினால் சாலட்டை கண்டிப்பாக நம்புங்கள். சிஸ்டமை கூலாக்கி க்ளீனாக்கி விடு கிறது. வீக்காக்காமல் எனர்ஜியைத் தரு கிறது. ஒரு ரிஜிவெனேட்டராக செயல்படு கிறது...'' என்று அநியாயத்துக்கு உணர்ச்சி வசப்பட்டு பொது மக்களை ஊக்குவித் திருக்கிறார். (இப்போதைய தலைவர்கள் யாரேனும் இப்படி ஹெல்த்தியாகப் பேசு வதுண்டா?)

அமெரிக்காவுக்கு லெட்டூஸை அறி முகப்படுத்தியதே கொலம்பஸ்தானாம்!

சாலட் பண்ணுவதில் கில்லாடிகள் பிரான்சு மக்கள். முன்னோடிகளும் இவர் களே. பல நூற்றாண்டுகளுக்கு முன்னால் மன்னர்கள், பெரிய பணக்காரர்கள்... எங்கு வெளியூருக்கு சென்றாலும் ஒரு சாலட்



எக்ஸ்பர்ட்டையும் தன்னுடனேயே அழைத்துச் செல்வார்களாம். அவர் ஒரு பெரிய பெட்டியில் வினிகர், மயோனெஸ், ஆலிவ் ஆயில், கெட்ச் அப்... என எல்லா பொருட்களையும் கட்டிக் கொண்டு சாலட் செய்து சந்தோஷப்படுத்துவார்.

நீங்கள் வீட்டில் செய்து பார்க்க ஒரு கரகர சாலட்....

# சீரிளமை சாலட்!

### கரகர க்ரன்சி சாலட்

வெள்ளரி, தக்காளி, வெங்காயம், காரட், உருளைக்கிழங்கு வேகவைத்தது (வேண்டுமானால்), மாங்காய் - தலா 1, கொத்துமல்லி - 1 டேபிள் ஸ்பூன்(பொடியாக நறுக்கியது), பச்சை மிளகாய் - 2 (பொடியாக நறுக்கியது), கார்ன் ஃப்ளேக்ஸ் - ½ கப், வொயிட் வினிகர் - 1 டேபிள் ஸ்பூன், சர்க்கரை (பொடி செய்தது) - ½ டீஸ்பூன், லெமன் ஜூஸ் - 1 டீஸ்பூன், சீரகப் பொடி (வறுத்து தூளாக்கியது) - ½ டீஸ்பூன், உப்பு - ருசிக்கேற்ப.

கார்ன் ஃப்ளேக்ஸைத் தவிர்த்து எல்லாவற்றையும் மிக்ஸ் பண்ணி 'சில்' பண்ணவும். சர்வ் பண்ணும் போது கரகர கார்ன் ஃப்ளேக்ஸ் தூவித் தரவும். கலர் கலரா காய்கறி சாலட் சாப்பிடுங்க. எனர்ஜெடிக்கா வளைய வாங்க. ''சாலடும் நீயே சத்தும் நீயே, ஜில்லும் நீயே ஜோரும் நீயே... (காலையும் நீயே மெட்டு) என்று பாடுங்க...!



**« லைலா ஸ்டைலா வீசிச் சென்ற பிறகு காற்றாலை மின் உற்பத்தி பெருகி, பவர்கட் கணிசமாகக் குறைக்கப்பட்டுள்ளது என்பதே சசிக்குமாருடைய ஆலோசனைக்கு வலுசேர்க்கிறது... »**



"இந்த முறை மதுரை மாவட்டத்தில் ப்ளஸ் டு தேர்ச்சி விகிதம் சற்றுக் குறைந்ததற்கு மின்வெட்டும் ஒரு காரணம். கிராமப்புறங்களில் அறிவிக்கப்படாத மின்வெட்டு பல மணி நேரம் அமுல்படுத்தப்பட்டதால், மாணவ, மாணவிகள் தடுமாறித் தேர்வில் தோல்வியடைய நேர்ந்தது என எங்களிடம் வெளிப்படையாகவே சொன்னார்கள்!" - மதுரையில் உள்ள பிரபல தமிழ்த் தினசரியின் மூத்த நிருபர் ஒருவர் தரும் தகவல் இது.

மாணவ, மாணவிகள் மட்டுமல்ல. சமூகத்தின் பல பிரிவினரும் மின்வெட்டால் கடுமையாகப் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். மின்வாரியத்தைக் கேட்டால், "தேவையின் அளவு உயர்ந்துகொண்டே போகிறது" என்று சொல்கிறது. ஆனால், கருணாநிதியும், ஜெயலலிதாவும், "உற்பத்தி உயராததற்கு நீங்கள்தான் காரணம்" என்று ஒருத்தரையொருத்தர் லாவணி பாடிக் கொண்டிருக்கிறார்கள். மொத்தத்தில் மக்களில் பெரும்பான்மையோர் மின்வெட்டோடு வாழப் பழகி விட்டார்கள் என்றுதான் சொல்ல வேண்டும்.

"மின்வாரியம் அறிவித்த மின்வெட்டு மூன்று மணி நேரம் காலையில் அமைந்து விட்டால், வீட்டில் ஒரே ரகளைதான் போங்கள்" என்கிறார் அம்பத்தூர் செங்குன்றம் சாலையில் வசிக்கும் தனலட்சுமி. "மிக்ஸி, கிரைண்டர், மைக்ரோ ஓவன்" என்று நாம் பழகிவிட்டோம். காலை மின்வெட்டில், இவை நம்மைக் கைவிட்டால் அதோகதிதான். எனவே, முதல்நாள் இரவு சமையலைத் தீர்மானித்து, அரைக்க வேண்டியதை எடுத்து அரைத்து ஃப்ரிட்ஜில் வைத்து விடுகிறேன். சில சமயம் இரவு பல மணி நேரம் மின்சாரம் இல்லையென்றால், ஃப்ரிட்ஜில் வைப்பதும் கெட்டுவிடும் வாய்ப்பு இருக்கிறது."

குரோம்பேட்டை ரமேஷ் பாபு, "சமையலை விடுங்க... குளிக்கிறதே பிரச்னையா போயிடுது. நிலத்தடி நீரை மின்சாரம் இருக்கும்போதே, அவ்வப்போது மேல் தொட்டிக்கு ஏற்றிவிட வேண்டும். இல்லையெனில் பாலைவன வாழ்வுதான். மேலும், அன்றாடம் செய்தித்தாளைப் பார்த்து, "நம் ஏரியாவில் பழுதுபார்க்க மின்சாரத்தை நிறுத்துகிறார்களா?" என்பதையும் பார்க்க வேண்டும். இரவு ஒன்றிரண்டு மணி நேரம் பவர் கட்டாகும் போது, வெந்து வியர்வையாகப் போன நிலையில், மொட்டை மாடியிலோ அல்லது வாசலிலோ படுத்துக் கொள்ளலாம் என்றால், கோடைத் திருடர்கள் தங்கள் கைவரிசையைக் காட்டுகிறார்கள்" என்று

# சட்டுனு போவுது மின்சாரம்! பட்டுனு முறைக்குது சம்சாரம்








சசிகுமார்

கடுப்புடன் சொல்கிறார்.

**"மா**ற்று எரிசக்தியே மனிதனுக்கு கைகொடுக்கும்" என்று வழிகாட்டுகிறார் கோவை கிரீன் விண்ட் அண்ட் சோலார் பவர்டெக் நிறுவனத்தின் நிர்வாக இயக்குனர் சசிகுமார்.

"முதலில் மின்சாரத்தை சேமிக்கப் பழகுவோம். திருடப்படும் மின்சாரத்தைத் தடுக்க வேண்டும். மழை குறைந்து வரும் காலகட்டத்தில், புனல் மின்சாரத்தை நம்பிப் பயனில்லை. 2020 வரை தான் பூமியில் நிலக்கரி கிடைக்கும் என்கிறார்கள். அணு மின்சாரம் ஆபத்து. இந்தச் சூழலில், மரபுசாரா எரிசக்தியான காற்று, சூரிய சக்தியைப் பயன்படுத்தி மாற்று எரிசக்தியைப் பயன்பாட்டுக்கு அதிக அளவில் கொண்டு வரவேண்டும். சூரிய சக்தியின் மூலம் வீட்டில் ஒரு லைட் எரியவைக்க முதலீடு சுமார் 3000 ரூபாய்தான். மொட்டை மாடியில் தேவைக்கேற்ப சூரிய யூனிட் போட்டு 24 மணி நேரம் மொத்த வீடும் பயன்பெறலாம். தொழிற்சாலைகளும் அதிகக் காற்றாலைகள் நிறுவி மின்வாரியத்திற்கு ஏற்படும் சுமையைக் குறைக்கலாம். மழைநீர் சேமிப்பது கட்டாயம் என்று சொன்னது போல, வீடுதோறும் மரபுசாரா எரிசக்தி பெறுவதற்கு வசதி செய்து கொள்ள வேண்டும் என்பதைக் கட்டாயமாக்கினால், மின்வாரியம் கொஞ்சம் ரிலாக்ஸ் ஆகலாம். மின்வெட்டுக்கு பை, பை சொல்லலாம்" என்கிறார் சசிகுமார். சசி என்றாலே நிலவு என்றுதான் அர்த்தம்! ஒளிபெறுவது சூரியனால்தானே!

- ஸ்ரீநி



# எப்படி முடியுது சென்னை வாசிகளால்?

**சென்னையில் பிறந்து வளர்ந்தவர்களே கோடை வெயிலின் உக்கிரத்தால் வியர்த்து விறுவிறுத்து அல்லாடும்போது, இயற்கையாய் ஏஸி செய்யப்பட்டிருக்கும் ஊட்டியில் இருந்து சென்னை வருபவர்களுக்கு எப்படி இருக்கும்? ஊட்டி சட்டமன்ற உறுப்பினர், காங்கிரஸைச் சேர்ந்த கோபாலன் அவர்களின் அனுபவத்தைக் கேட்டால்...**

"ஏப்ரல், மே மாதங்களில் தொடரும் பட்ஜெட் கூட்டத் தொடரில் கலந்து கொள்ளும்போதுதான், வெயிலின் தாக்கத்தையும் அனலின் கொடுமையையும் சென்னைவாசிகள் எப்படித்தான் சமாளிக்கிறார்களோ என்று வியந்து போவதும் உண்டு. ஊட்டியில் வருடம் முழுவதும் ஒரு ஸ்வெட்டராவது போட வேண்டியிருக்கும். ஆனால், சென்னைப் பயணம் - அதுவும், கோடைக்காலத்தில் என்றால், கதர்ச்சட்டை, பருத்தி வேட்டிதான் பெட்டி நிறைய இருக்கும். அந்தச் சமயத்தில் சென்னையில் தேவையில்லாமல் எங்கும் வெளியே செல்ல மாட்டேன். மாலையானால், மெரீனாவுக்குப் போய் ரிலாக்ஸ் செய்து கொள்வேன். சில சமயம் கரண்ட் கட்டாகி விடும். வியர்வைக் குளியல்தான். அடுத்து உணவு. ஊட்டியில் காலையிலேயே சாப்பாடு சாப்பிட்டு விடுவேன். இங்கே அவ்வளவு சீக்கிரம் சாப்பாடு கிடைப்பதில்லை. டிபன் சாப்பிட வேண்டியதாக இருக்கிறது. சென்னையில் அசைவ உணவைத் தொடுவதற்கே பல முறை யோசிப்பேன். காரணம், உஷ்ண பூமியான சென்னையில் அசைவம் சாப்பிட்டால், வயிறு அப்செட் ஆகிவிடும் என்ற பயம்.

ஊட்டியில் எங்கள் வீடுகளில் மின் விசிறியும் கிடையாது; ஏஸியும் கிடையாது. கரண்ட் கட் பயமும் கிடையாது. ஆனால், சென்னையில் இவையிரண்டில் ஏதாவது ஒன்றைப் போட்டுக் கொள்ளத்தான் வேண்டும். எனக்கு அந்தப் பழக்கம் இல்லாததால், சில சமயம் அதைப் பற்றிய உணர்வு இல்லாமல் வியர்த்த படியே இருப்பதுண்டு. யாராவது, "ஸார்... ஃபேன் போடுங்க" என்று ஞாபகப்படுத்துவார்கள். என்னைவிட, என்னைத் தேடி வரும் தொகுதி மக்கள் ரொம்பவே நொந்து போவார்கள். கோடை விடுமுறையில் சென்னையைப் பார்ப்பதற்கு யாரையும் நான் கூட்டிச் செல்வதில்லை. எங்கள் ஆட்களால் காலை ஒன்பது மணி சென்னை வெயிலையே தாக்குப்பிடிக்க முடியாது" என்கிறார் படுகா சமூகத்தில் முதன் முதலாகத் தமிழ் மேற்படிப்பு படித்த இந்தச் சட்டமன்ற உறுப்பினர்.

- ப்ரியன்

# கல்கி

Sri Palsani JEWELS

இணைந்து வழங்கும்

# கோடைக்கால கொண்டாட்டம்

## ஆறு வார அதிரடி போட்டி!

இந்த வாரம் கோடைக்காலக் கொண்டாட்டத்தில் 'ஜில் ஜில் ஸ்பெஷல்' என்பதால் இந்த ஜில் இதழை அடிப்படையாகக் கொண்ட

**கோடைக்கால போட்டி - 6** இதோ...

***விதிமுறைகள் :*** ● கல்கி வழங்கும் கோடைக்கால கொண்டாட்டம் ஆறு வாரப் போட்டி இந்த இதழோடு சேர்த்து ஆறு வாரங்கள் வெளியாகும். (போட்டி-1, மற்றும் போட்டி - 2, 3, 4, 5 முறையே மே 2, மே 9, மே 16, மே 23, மே 30 இதழ்களில் இடம்பெற்றன) ● ஒவ்வொரு வாரமும் வெளியாகும் போட்டிக்கான விடைகளை நிரப்பி, போட்டிப் பக்கங்களைக் கத்திரித்துப் பத்திரப்படுத்தவும். (81 - 82 பக்கம் முழுவதையும்). ● இந்த வாரம் ஸ்பெஷல் போட்டியும் உண்டு. ● ஆறு வாரப் போட்டிப் பக்கங்களை ஒன்றாக இணைத்து அனுப்ப வேண்டும். ● ஆறு வாரப் போட்டிப் பக்கங்கள் வந்து சேரக் கடைசித் தேதி : **17.06.2010** ● சரியான விடை எழுதிய வாசகர்களுள், குலுக்கல் முறையில் தேர்வாகும் ஆறு அதிர்ஷ்ட சாலிகளுக்கு, தலா கால் சவரன் தங்கக் காசு பரிசு ● சரியான விடை எழுதி, ஸ்பெஷல் போட்டியின் அடிப்படையில் தேர்வாகும் ஓர் அதிர்ஷ்டசாலிக்கு ஒரு சவரன் தங்கக் காசு பரிசு. ● ஆசிரியர் தீர்ப்பே இறுதி.



**A** ஒவ்வொரு குறிப்பும் ஒரு வார்த்தையை உணர்த்துகிறது. அந்த நான்கு வார்த்தைகளையும் (விடைகளையும்) இந்த இதழிலுள்ள கட்டுரைகளைப் படித்தால் கண்டு பிடித்துவிடலாம். தவிர அந்த நான்கு விடைகளும் கீழே உள்ள சின்னஞ்சிறு கதையிலும் ஒளிந்திருக்கின்றன. இந்த விதத்திலும் உங்கள் விடைகளை உறுதி செய்து கொள்ளுங்கள்.

**குறிப்புகள் :** 1. பங்கா என்பது இதுதான்

### A-க்கான விடைகள்

| | |
|---|---|
| 1 – | 3 – |
| 2 – | 4 – |

கோடைக்காலப் போட்டி, கல்கி
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

2. அன்டோராவிடம் இல்லாதது
3. இதற்கா காய்ச்சல்?
4. சிக்கிமில் நேரில் காணாது கனவில் கண்டது

1. பேராசிரியர் தத்தாவுடன் பேசத் தொடங்கிய சில கணங்களிலேயே அவரது விசிறி ஆகிவிட்டான் ரஷீத். ''ஊருக்குப் போனபிறகு தினமும் பத்து நிமிடங்களாவது இவருடன் தொலைபேசியில் தொடர்பு கொண்டு நிறைய விஷயங்களை அறிந்து கொள்ள வேண்டும்''.

2. பறந்து வந்து கொண்டிருந்த அவர்களையும் சேர்த்து, அந்த 158 பயணிகளையும் அனுதாபத்துடன் 'வரவேற்கக்' காத்திருந்தது மங்களூர் விமான நிலையம்.

3. சந்தோஷ் கோப்பை போட்டிக்கான அணியில் தானும் தேர்வு செய்யப்பட்டதை அறிந்ததிலிருந்து விஷ்வா உற்சாகத்தில் மிதந்தான். ''சிறு வயதிலிருந்தே கால்பந்து விளையாட்டில் முழுமூச்சாக ஈடுபட்டதற்குப் பலன் கிடைத்துவிட்டது''. இன்னும் இரண்டே நாட்களில் பயிற்சிகள் தொடங்கிவிடும். ஆஹா!'.

4. நவீன தொப்பி ஒன்றை அணிந்திருந்த இளைஞனின் சிந்தனை - ''இன்னும் ஒரு வாரத்தில் எங்கள் குழு திட்டமிட்டிருக்கும் சதி மட்டும் நிறைவேறிவிட்டால் இந்தியா தவித்துத் திணறும். அதுதானே எங்கள் லட்சியம்!''

**உருவாக்கம் : ஜி.எஸ்.எஸ்**

B **ஆறாவது வார ஸ்பெஷல் போட்டி :** நால்வரியில் விளம்பரப் பாடல் ஒன்று எழுதவேண்டும். இடையிடையே இரண்டு இடங்களில் பல்சானி (palsani) என்ற நிறுவனத்தின் சொல் வரவேண்டும். (பாடலை கீழ்க்கண்ட இடத்தில் மட்டும் எழுத வேண்டும்)

**B-க்கான விளம்பரப்பாடல்:**

______

______

______

______

தங்கக் காசு
பரிசு
வழங்குவோர்:
Sri Palsani JEWELS

**கோடைக்காலப் போட்டி - 6**

பெயர் : ..........

முகவரி : ..........

..........

..........

தொலைபேசி : ..........

இயக்குநர் சீமான் தமது நாம்-தமிழர் அமைப்பின் முதல் மாநாட்டை மதுரையில் நடத்தி முடித்திருக்கிறார். தமிழ் ஈழ ஆதரவாளர்களின் குரல் ஒன்றுபட்டு ஒலித்து வந்த நிலையில், சீமான் தனி ஆவர்த்தனம் வாசிப்பதன் பின்னணியில் ஆளும் கட்சியின் கைவரிசை இருக்கிறதோ என்று சந்தேகப்படுகிறார்கள் நெடுமாறனின் தமிழர் தேசிய இயக்கத்தின் பிரமுகர்கள். ''ஏற்கெனவே திருமாவளவன், தி.மு.க.வோடு அரசியல் கூட்டணியில் இருக்கிறார். சுப.வீரபாண்டியனும் கலைஞர் விசுவாசியாகி விட்டார். இந்த நிலையில், சீமானை, தனிக்குரலாக ஒலிக்க வைப்பதன் மூலம் நெடுமாறன், வை.கோ. ஆகியோரது குரலைப் பலவீனமாக்க முயற்சி செய்கிறது ஆளும் கட்சி'' என்கிறார்கள் அவர்கள்.

• • • • •

ஒருவழியாக அன்புமணிக்கு, கருணாநிதி பச்சைக் கொடிகாட்டி விட்டாராம். ஸ்டாலின், பொன்முடி, எ.வ.வேலு போன்றோர் கடுமையாக எதிர்த்தும், முதல்வர் பா.ம.க.வை மீண்டும் அணைத்துக்கொள்வதாக முடிவு செய்து விட்டாராம். தி.மு.க. உயர்மட்டக்குழுக் கூட்டம் நடக்கும் நாள் அன்று முதல்வரும், டாக்டர் ராமதாஸும் சந்தித்துக் கைகுலுக்கிக் கொள்வார்களாம். ''பா.ம.க.வுடன் கூட்டணி வைத்துக்கொள்வதன் மூலம், தமிழகத்தில் ஆறு மாவட்டங்களில் எங்களுக்கு வாய்ப்புள்ள பல தொகுதிகளை, அவர்களுக்குப் பங்கிட வேண்டியிருக்கும். இதனால் எங்கள் உள்ளூர்த் தோழர்கள் கடும் அதிருப்திக்கு ஆளாவார்கள். 'பலமான கூட்டணி வேண்டும்' என்ற அடிப்படையில் தலைவர் பா.ம.க.வுடன் உறவுகொள்ளக்கூடும். ஆனால் எதிர்மறையான விளைவுகள் ஏற்பட்டால் ஆச்சர்யமில்லை'' என்று எச்சரிக்கிறார் விழுப்புரம் மாவட்ட தி.மு.க. பிரமுகர் ஒருவர்.

• • • • •

தி.மு.க. காங்கிரஸ் கூட்டணியில், வரும் சட்டமன்றத் தேர்தலில், காங்கிரஸுக்கு 78 இடங்கள் கொடுக்க வேண்டும் என்று, முதல் கல்லை கார்த்தி சிதம்பரம் வீசியிருப்பதற்குக் காங்கிரஸில் தொண்டர்கள் மத்தியில் நல்ல வரவேற்பு இருக்கிறதாம். ''ஆட்சியில் பங்கு கிடையாது; அவர்கள் சவாரி செய்ய தோளும் கொடுக்க வேண்டும். இந்நிலையில் அதிக இடங்கள் கொடுத்தால் என்ன?'' என்று கேட்கிறார்கள் சில பிரமுகர்கள். இந் நிலையில் மேலவையில் இடம்பெறுவதற்கு காங்கிரஸில் இப்போதே முட்டல், மோதல் துவங்கி விட்டது.

- **சஞ்சயன்**



# அருட்கனிவின் திருவுரு

**அக்ஞானத்வாந்த தீபிகா** - அஞ்ஞானமாகிற இருட்டில், பிரகாசமான தீபமாக இருக்கக்கூடியவள். நமக்குள்ளே இருக்கும் இருட்டைப் போக்கக்கூடியவள். இதை எடுத்துக் கொண்டுதான் ஆசார்யர் 'அந்தஸ் திமிர மிஹிர த்வீப நகரி' எனப் பாடினார். உள்ளுக்குள்ளே இருக்கக் கூடிய இருட்டைப் போக்கக்கூடியவள்.

**தே**வி மஹாத்மியம் சொல்கிறது, அம்பாள் ஒன்பது வயது பாலாவாக வந்தாள். ஓடி வந்தாள். பண்டாஸுரனுடைய புத்திரர்கள் முப்பது பேரையும் வதம் செய்தாள் என்று. அதற்கேற்ப அமைந்த திருநாமம் **ஆபால கோபவிதிதா.**

இங்கே **ஆபால** என்றால் குழந்தைகள். கோப என்பது கோபாலனாகிய பகவான் மஹாவிஷ்ணு என்றும் எடுத்துக் கொள்ளலாம். பசுபதி என்று பரமேசுவரன் சிவனை அழைக்கிறோம். பசுக்களாகிய ஜீவர்களின் பதி அல்லது தலைவன் என்று பொருள். ஆகவே கோபாலன் என் பது சிவனுக்கும் பொருந்தக்கூடிய பெயர்தான்.

பசுக்களாகிய ஜீவர்களை மேய்ப்பவனான ஸ்ரீ கிருஷ்ணன், யதுகுலத்தில் தோன்றினாலும், இடைக்குலத்தில் போய், தன் வாழ்க்கையை நடத்தினான். ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில் ஒருத்தி மகனாய் ஒளித்து வளர்ந்தான்.

**ஆபாலகோபவிதிதா** என்று அம்பாளைக் குறிப்பிடுகிறபோது, சின்னக் குழந்தையான பாலா தொடங்கி விஷ்ணுவாகவும் சிவனாகவும் இருக்கக்கூடிய கோபால வடிவங்களாகவும் இருக்கிறாள் என்று பொருள். எல்லாமாகவும் அவளே இருக்கிறாள்.

சாதாரணமாக, தென்மாவட்டங்களில் சொல்வழக்கு உண்டு. ''ஆபாலன் கோபாலன் எல்லாம்...'' என்பார்கள். ஆபாலன் என்பது ஒரு முனை; கோபாலன் என்பது மறுமுனை. அதாவது குழந்தை குட்டி முதல் ராஜா - தலைவன் வரை என்று பொருள்.

அம்பாள் சிறு பிராயத்து பாலாவாகவும் இருக்கிறாள். விஷ்ணு, ருத்ரன் வரை அனைத்து ஸ்வரூபங்களாகவும் இருந்து அருள்பாலிக்கிறாள். அவர்களையும் பசுக் கூட்டங்களான ஜீவன்களையும் வழிநடத்துகிறாள்.

## உல்லாச சாஸனங்கள்!

***ஸர்வானுல்லங்க்ய சாஸனா*** - எல்லா விதமான சாஸனங்களையும் உல்லாசமாக ஏற்படுத்தக்கூடியவள் - மிக விளையாட்டாகவே அனைத்தையும் தீர்மானிப்பவள்.

***ஸ்ரீ சக்ரராஜ நிலையா*** - இந்தக் கடைசி திருநாமங்கள் எவ்வாறு வந்து முடிகின்றன என்று பார்த்தால், பாலாவாக - சிறுமியாக வரக்கூடியவள், சர்வ ஜீவர்களுக்கும் தலைவியாக இருப்பவள், ஜகத்தையெல்லாம் சிருஷ்டி செய்தவள் - அப்படிக் களிப்புடன் விளையாட்டாக அனைத்தையும் செய்பவளே ஸ்ரீசக்ரராஜத்தைத் தமது இருப்பிடமாகக் கொண்டிருக்கிறாள்.

அம்பாளுடைய ரதத்துக்கே ஸ்ரீசக்ர ராஜ ரதம் என்றுதான்



ஸ்ரீ லலிதா
நான்காம் பாகம்

சுதா சேஷய்யன்

பெயர். **சக்ர ராஜ ரதாரூடா** - என்ற திருநாமம் ஆரம்பத்தில் வந்ததல்லவா...? ஒரு பக்கம் அசுவாரூடா வருகிறாள். இன்னொரு பக்கம் வாராஹி வருகிறாள். மந்த்ரிணிக்கும் வாராஹிக்கும் நடுவிலே, ஷ்யாமளாவுக்கும் வாராஹிக்கும் நடுவிலே, தன்னுடைய சக்ர ராஜ ரதத்தை செலுத்தியபடி செல்கிறாள் ஸ்ரீ லலிதாம்பிகை. அதைத் தனது நிலையமாகக் கொண்டிருக்கிறாள். ஸ்ரீசக்கர வடிவத்தில் ஆவாஹனம் ஆகியிருப்பவளும் அவளே.

**ஸ்ரீமத் த்ரிபுரசுந்தரி** - திரிபுரசுந்தரியாக - திரிகோணங்களுக்குத் தலைவியாக, திரிகோணங்களால் ஏற்பட்ட பிந்துஸ்தானத்தில் வாசம் செய்யக்கூடியவளாக, த்ரிபுரங்களை எரிக்கக்கூடியவளாக, நம்முடைய மும்மலங்களை எரிக்கக்கூடியவளாக, ஞான வடிவினளாக அத்தனையுமாக இருப்பவள்... அதே சமயத்தில் முப்புரையாக - த்ரிபுரத்தைத் தோற்றுவிக்கக்கூடியவளாக இருப்பவள்.

## மருந்துக்கு மருந்து!

**ஸ்ரீ சிவா** - சிவ ஸ்வரூபமாக சிவாவாக இருக்கிறாள். சிவா என்று சொன்னால் அது பெண் ஸ்வரூபம். சிவ என்று சொன்னால் அது ஆண் ஸ்வரூபம். வடமொழியில் 'ஆ' என்று நீட்டிச் சொன்னால் பெண்பாலைக் குறிக்கும்.

வைத்யநாதராக இருக்கக்கூடிய சிவன் உலகத்துக்கே மருந்து; அந்த சிவனுக்கே மருந்து அம்பாள்தான்! இதனைக் குறிக்கும் வாக்கியம்:

*சிவ - விச்வஸ்ய பேஷஜி*
*சிவா - ருத்ரஸ்ய பேஷஜி*

விச்வத்துக்கே மருந்து சிவன்; அவனுக்கு மருந்தோ **சிவாவான** அம்பாள்.

சிவனுடைய தர்மபத்னி மட்டுமல்ல; சிவனுடைய ஆணையாக, ஆற்றலாக விளங்கக்கூடியவள் சக்தி. சக்தி இல்லையேல் சிவன் 'சிவனே' என்று இருக்கும். அந்த சக்தியாக இருப்பவள் **ஸ்ரீ சிவா.**

## ஐக்கியம் உணர்வதே அனுக்ரஹம்

**சிவசக்தியைக்ய ரூபிணீ** - சிவனும் சக்தியும் ஒன்றாக இருக்கக்கூடிய ஐக்கிய ஸ்வரூபிணி -

999வது திருநாமம் வரைக்கும் பார்த்து விட்டோம். முதல் மூன்று திருநாமங்கள் முறையே சிருஷ்டியை, ஸ்திதியை, லயத்தைச் சொல்லக்கூடியவை என்று பார்த்தோம்.

**ஸ்ரீ மாதா** - முதல் திருநாமம் சிருஷ்டியின் ஆரம்ப நிலையாக - தாயாக அம்பிகை இருக்கிறாள் என்று கூறுகிறது. படைத்தல் தொழிலைச் சொல்கிறது.

**ஸ்ரீ மஹாராக்ஞி** - என்ற இரண்டாவது திருநாமம் காப்பாற்றக்கூடிய ராஜ்யதாயினியாக அவள் இருப்பதைச் சொல்கிறது - ஸ்திதி என்ற தொழிலை உணர்த்துகிறது.

**ஸ்ரீமத் சிம்ஹாஸனேசுவரி** - இது மூன்றாவது திருநாமம். மஹாராக்ஞி என்ற திருநாமத்துடன் இதை இணைத்துப் பார்த்



தால், சிம்மாஸனத்தில் வீற்றிருப்பவள் என்று எடுத்துக் கொள்ளலாம். 'ஹிம்சானேசுவரி' என்று திருப்பிப் போட்டுப் பார்த்து பொருள் கொள்ளும் மரபின்படி, ருத்ரனுடைய பணியைச் செய்யக் கூடியவள் - சம்ஹரிக்கக்கூடியவள் என்று பொருள் கொள்ளலாம்.

நான்காவது திருநாமத்தில் ஆரம்பித்து, 999வது திருநாமம் வரைக்கும் திரோபாவத்தையும் அனுக்ரஹத்தையும் சொல்லக் கூடிய திருநாமங்கள்.

மஹாமாயையால் - திரோபாவத்தால் அம்பிகை நமக்கு அனைத்தையும் கொடுத்து, இன்றைக்குப் பண்ணுகிற இந்தக் காரியம்தான் சாசுவதம் என்கிற நம்பிக்கையையும் தருகிறாள். அதே சமயத்தில், அந்த ஜரையிலிருந்தும் (மூப்பு) ம்ருத்யுவிலிருந்தும் (மரணம்) பிறப்பு - இறப்பிலிருந்தும் நம்மை மேலே தூக்கிக் கொண்டு வந்து உத்தாரணமும் செய்கிறாள். நம்மைக் காப்பாற்றி அனுக்ரஹம் செய்கிறாள். நான்காவது முதல் 999 வது திருநாமங்கள் இதைத்தான் பலவிதங்களில் வர்ணித்துச் சொல்கின்றன. 999 வது திருநாமமான சிவசக்தியைக்ய ஸ்வரூபிணி என்பதுதான் அனுக்ரஹ திருநாமம். அவளே சிவ-சக்தி ஐக்கிய வடிவம் என்று உணர்ந்தால், அதுதான் நமக்குப் பெரிய அனுக்ரஹம்.

ஆக, ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம், திரோபாவம், அனுக்ரஹம் என்ற ஐந்தும் சேர, பஞ்சக்ருத்யபராயணாவாக இருக்கக்கூடியவளைக் குறிக்கும் இறுதித் திருநாமம்தான் **ஸ்ரீலலிதாம்பிகா** - ஆயிரமாவது திருநாமம்!

## பலன் பெரிது!

ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாமத்தில் என்ன ஒரு சிறப்பு என்றால், சஹஸ்ரநாமம் எவ்வளவு நீளமோ, அவ்வளவு நீளம் பலஸ்ருதியும் உண்டு! மற்ற க்ரந்தங்களில் பலஸ்ருதி சிறியதாக இருக்கும்; கதை பெரியதாக இருக்கும். ஆனால், அம்பிகையின் திருநாமத்தைச் சொன்னால் என்ன பலன் கிடைக்கும் என்கிற பலஸ்ருதியே கிட்டத்தட்ட சஹஸ்ரநாமம் அளவுக்குப் பெரியது!

அவகாசம் கருதியும் ரகஸ்ய பூர்வமானவை என்பதாலும், சிலவற்றை இந்தத் தொடரிலே நாம் சிந்திக்க முடியாமல் இருந்திருக்கலாம். இருந்தாலும், அம்பாள் ஸ்தோத்திரப்ரியா! - அவளுடைய திருநாமங்களைச் சொல்லி அர்ச்சித்தால் போதும்... அவற்றை எப்படிச் சொன்னாலும் அவள் ஏற்றுக்கொள்வாள்.

எந்தத் திருநாமத்தால் அழைத்தாலும் அதை ஏற்றுக்கொண்டு, எல்லோருக்கும் எப்போதும் அதிகமாகத் தரக்கூடிய அந்த அம்பாள், எல்லாவிதத்திலும் எல்லோருக்கும் நன்மைகளையே எப்போதும் நல்கட்டும் என்பதையே

ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரியாக...

காமாக்ஷியாக...

த்ரிபுரசுந்தரியாக...

மஹாகாளியாக, மஹாசண்டியாக இருக்கக்கூடிய அந்த ஸ்ரீ லலிதாம்பிகையிடம் பிரார்த்திப்போம். அவள் நினைவு நம்மை விட்டு என்றும் நீங்காமல் நிறையட்டும்; அவள் அருட்கனிவு எப்போதும் நமக்கு சித்திக்கட்டும். **(நிறைந்தது)**

ஸ்ரீ லலிதா தொடரின் அனைத்து பாகங்களிலும் இடம்பெற்ற அத்தியாயங்கள், டாக்டர் சுதா சேஷய்யன் ஆற்றிய ஆன்மிகப் பேருரையின் வரி வடிவம். ஒலிப்பதிவுகளை அளித்து உதவிய சென்னை, வீனஸ் காலனி, ஆஸ்திக சமாஜம் அமைப்புக்கும், பிரசுரிக்க அனுமதி வழங்கிய டாக்டர் சுதா சேஷய்யனுக்கும் மனமார்ந்த நன்றி. தொடருக்கு ஓவியங்கள் வரைந்த வேதகணபதிக்கு நன்றி. (ஆசிரியர்)

**வா**சகர்களின் 'போடுங்கய்யா தீர் மானம்' கவனிக்கப்பட வேண்டியவைதாம்.

**- வி.ரெங்கநாதன், திருச்சி**

**எஸ்**.எஸ்.ராமசுப்புவின் பாராளு மன்றப் பேச்சைப் பற்றிப் படித்தபோது, வியப்பாகவும் மேலும் நல்லதொரு செய்தியை அறிந்துகொண்டோம் என்ற மனநிறைவும் ஏற்பட்டது.

**- எம்.இராஜேந்திரன், லால்குடி**

''**ப**ள்ளியெனும் பழக்காடு''க்கு நூறு விழுக்காடு கொடுக்கலாம். சுத்தம், சுகா தாரம், கல்வி, பட்டத்திபாளையம் ஊராட்சி ஒன்றியத் துவக்கப் பள்ளியில் காணும் போது, நாம் தமிழகத்தில்தான் இருக் கிறோமா எனச் சந்தேகம் வருகிறது. கல்வி யாளர்கள் அனைவரும் கண்டு பாடம் பெற வேண்டிய பள்ளி.

**- ஜி.லட்சுமி வாசுதேவன், வேளச்சேரி**

**ம**னசைப் பக்குவப்படுத்துவதற்கும், உயர்த்துவதற்கும் அருள் வாக்கு பக்கம். கல்கியின் முத்திரைப் பக்கம் இது!

**- தஞ்சை ஹேமலதா, வெண்டையம்பட்டி**

''**இ**ன்டீரியர் டெக் கரேஷன்' தலைப்பில் வழங்கிய அனைத்து டிப்ஸும், யதார்த்தமாக அமைந்தது மகிழ்ச்சி.

**- எம்.கே.அருள் ராஜா, அரியலூர்**

'**கோ**ரிப்பாளையம்' வரைபடத்தில் இல்லாத வில்லங்கச் சிற்றூர்,' என்ற தங் களின் விமர்சனம் நூற்றுக்கு நூறு சரி. கோரிப்பாளையம் அருகிலேயே வசிப்பதால் கூறுகிறேன். கேடிப்பாளையமாய் அபத்த மாய் சித்தரித்துள்ளார்கள்.

**- எஸ்.உதயகணேஷ், மதுரை-2.**

**அ**டுத்த அமைச்சர் குஷ்புதான். எவ் வளவோ பண்ணியிருக்கோம். இது பண்ண மாட்டோமா...?

**- கவின் டோனிமார்ஷ், மதுரை**



# இது பண்ண மாட்டோமா?

க்ரீவ், போத்திஸ் My Tree My Family, யெல்லோவ் டு

## பரிசுக் கடிதம்

கிழக்குப் பதிப்பகம் வழங்கும் ரூ.250/- மதிப்புள்ள நூல்கள் பரிசு பெறும் கடிதம்:

**கோ**வை, தேவாங்கப்பேட்டை யில் பல வருடங்களுக்கு முன் ஆயிரக் கணக்கான நெசவாளர்கள் இருந்த தாகவும், இப்போது பல நெசவாளர் களின் வாரிசுகள் இந்தத் தொழிலைச் செய்வதில்லை என்றும் கூறி வருத்தப் பட்ட ராஜேஷ்குமாருக்கு நெசவுத் தொழிலால், கால் வயிற்றுக் கஞ்சி கூடக் குடிக்க முடியாதபடி அரசு நடந்து கொள்கிறது என்பது தெரி யாதா?

**- கே.தெய்வசிகாமணி, சென்னை-5**

வெள்ளித்திரை ஃபேஷன் ஃபாக்ட்ஸ் செய்திகளை வழங்கி, கோடையின் கடுமையைக் குறைத்துவிட்டீர்கள். பசுமை விரும்பு: கல்கி படி!

- கே.ஜகந்நாதன்,
சேலம்-1.

**கோ**டையை இனிது என்று சொன்ன அண்ணா கண்ணனின் கவிதையும் மிக இனிது.

-என்.பாலகிருஷ்ணன்,
மதுரை.

**ப**ட்டையைக் கிளப்பிவிட்டது, 'சம்மர் சட்டையர்!'

-வே.ந.கதிர்வேல், வேலூர்-6

**ப**டிக்க வேண்டாமென்று விட்டு விட்டவரையும் 'கற்பு எனப்படுவது யாதெனில்...?' என்ற இந்திரா பார்த்தசாரதியின் கட்டுரையைத் தேடி எடுத்துப் படிக்க வைத்து விட்டாரே தராசு!

- கவிஞர் அய்யாறு வாசுதேவன்,
சென்னை-91

'திக் திக்' பரிசுப்போட்டியில்
பரிசு பெறும் அதிர்ஷ்டசாலி
வாசகர் யார்?
அடுத்த வாரம் தெரியும்!

---

**க**ல்கி இணைய இதழில் இந்த வாரம் சிறந்த கடிதம் எழுதி, கிழக்குப் பதிப்பகம் வழங்கும் ரூ.250/- மதிப்புள்ள நூல்களை பரிசாகப் பெறும் வாசகர் **நெய்வேலி கண்ணன்**. இதோ கடிதம்:

'**அ**ம்மாவை எப்படிக் கூப்பிட்டாலும் அம்மாவுக்கு சந்தோஷம்தானே?' இந்த வரிகளை சுதா சேஷய்யனின் ஞானக்கடல் அத்தியாயத்தில் படித்தேன். ஞானப் பாலுக்கு நிகரான வரிகள்.





நம்பிக்கையான முதலீடு.
பாதுகாப்பான வளர்ச்சி.

ஸ்ரீ நால்வர் நகர்
அச்சரப்பாக்கம்
DTCP அனுமதி பெற்றது

GST ரோடு மற்றும் ECR மத்தியில், ஸ்ரீ ஆட்சீஸ்வரர் சிவன் கோவிலுக்கு அருகில், GST நெடுஞ்சாலையிலிருந்து 5 நிமிட பயண தூரத்தில் பசுமையான சூழலில் அமைந்துள்ளது.

5 வருட மனைப் பாதுகாப்பு சேவை.

IDBI ஹோம் பைனான்ஸ் மற்றும் சுந்தரம் ஹோம் பைனான்ஸ் வாயிலாக கடன் வசதி உண்டு

செழிப்பான எதிர்காலத்திற்கு
இன்றே முதலீடு செய்யுங்கள்

2834 5104 (4 lines)

BLB ESTATES (P) LTD
Website: www.blbestates.com
INVESTING IN VALUES

# கால்பந்துக் காய்ச்சல்!

ச.ந.கண்ணன்

தென் ஆப்பிரிக்கக் கால்பந்து போட்டி (ஜூன் 11-ஜூலை 11) களை கட்டி நீண்ட நாளாகிவிட்டது. இனி அடுத்த ஒரு மாதத்துக்கு, கால்பந்து ரசிகர்களுக்கு ஊண், உறக்கம் எல்லாம் உலகக் கோப்பை ஆட்டங்களில் தான். ஓர் ஆப்பிரிக்க தேசத்தில் உலகக் கால்பந்துப் போட்டி நடப்பது இதுவே முதல்முறை. இந்த முறை பிரேஸில், ஸ்பெயின் இரண்டில் ஒன்று நிச்சயம் கோப்பையை வெல்லும் என்று கால்பந்து ரசிகர்களும் விமர்சகர்களும் அடித்துச் சொல்கிறார்கள். இந்தப் போட்டியில்தான் எந்த ஒரு நாடும் முதல் தடவையாக உலகக் கோப்பையில் ஆடவில்லை என்பதால், உலகக் கோப்பை ஆட்டம் பற்றிய அறிவும் அனுபவமும் எல்லா நாடுகளுக்கும் அத்துபடி.

கோப்பையை வெல்லும் அணிக்கு 135 கோடி ரூபாய் பரிசு. மொத்தம் 11 மைதானங்களில் ஆட்டங்கள் நடக்கவுள்ளன. இதற்காக ஐந்து புதிய ஸ்டேடியங்கள் கட்டப்பட்டுள்ளன. புதிய ஸ்டேடியம் கட்டப்படும்போது, நிறையப் பேரை இடமாற்றம் செய்ததில், பல சிக்கல்களைச் சந்தித்தது தென் ஆப்பிரிக்க அரசு. பாதிக்கப்பட்டவர்கள் இன்று வரை அரசுக்கு எதிராகப் போராட்டம் செய்துவருகிறார்கள். மேலும் மக்கள் நலப்பணிக்காக ஒதுக்கப்பட்ட நிதியைக் கால்பந்து போட்டிக்குத் திருப்பப்பட்டதாகவும், தென் ஆப்பிரிக்க அரசு மீது குற்றச்சாட்டு விழுந்துள்ளது. பல மக்கள் இயக்கங்கள் இந்தப் போட்டியைப் புறக்கணிக்



கவும் ஆட்டம் நடக்கும் போது எதிர்ப்பு தெரிவிக்கவும் முடிவு செய்துள்ளன. ஆனால், ரசிகர்களின் ஆதரவு எண்ணிப் பார்க்கமுடியாத அளவில் இருப்பதால், சின்னச் சின்னத் தடங்கல்களைத் தாண்டி விடமுடியும் என்று போட்டி அமைப்பினர் சொல்கிறார்கள்.

**உ**லகக் கோப்பை கை காண்பித்த அசகாயச் சூரர்கள் ஏராளம். கால்பந்து ஆட்டத்தின் பிதாமகனான பீலே ஆடிய நான்கு உலகக் கோப்பை ஆட்டங்களில் பிரேஸில் மூன்றுமுறை வென்றுள்ளது. அர்ஜென்டினாவின் மரோடோனோதான் 86-ம் உலகக்கோப்பையின் சூப்பர் ஸ்டார். 1986 உலகக்கோப்பையில் ஆறு வீரர்களைக் கடந்து, 62 மீட்டர் தனியாக பந்தைத் தட்டிச் சென்று கோல் போட்டார் மரோடோனா. இந்தத் தடவை அர்ஜென்டினாவின் மெஸ்ஸி மீதுதான் எல்லோருடைய பார்வையும் விழுந்துள்ளது. மரோடோனா பாணியில் அட்டகாசமான ஒரு கோலை மெஸ்ஸி அடித்ததால், மெஸ்ஸிடோனா என்கிற செல்லப்பெயர் அவருக்குச் சூட்டப்பட்டுள்ளது. 'என்னுடைய வாரிசு என்று இவரைத்தான் நான் குறிப்பிடுவேன். அச்சுஅசலாக என்னைப் போலவே ஆடுகிறார்.' என்று மரோடோனாவும் 23 வயது மெஸ்ஸியைத் தன் வாரிசாக அறிவித்திருக்கிறார்.

**கா**ல்பந்து விளையாட்டைக் கண்டுபிடித்தது இங்கிலாந்து. பிரேஸில் செதுக்கியது என்று சொல்வார்கள். இன்றைய தேதியில் கால்பந்து ஆட்டத்தில் பிரேஸில், உலகின் நெ.1 அணியாகும். பிரேஸில் வீரர்கள் கால்பந்தை ஒரு விளையாட்டாக மட்டுமே எண்ணாமல், ஒரு நடனமாகக் கருதி அதில் புதுமையையும் சாதனையையும் படைத்து வருகிறார்கள். பலமான வீரர்களும் திறமையான பயிற்சியாளர்களும் அவர்கள் வசம் இருப்பதால், பிரேஸிலை வீழ்த்த எந்த ஓர் அணியும் கடுமையாகப் போராட வேண்டிய நிலைமை. 2-வது நிலையிலுள்ள ஸ்பெயின், கடந்த உலகக் கோப்பையில் இரண்டாவது சுற்று வரையே முன்னேறியது. ஆனால் ஈரோ 2008 கோப்பையை ஸ்பெயின் வென்றதாலும், அவர்களின் கால்பந்து விளையாட்டின் தரம் நம்பமுடியாத அளவுக்கு முன்னேறியிருப்பதாலும், இந்தத் தடவை ஸ்பெயின் உலகக்கோப்பையை வெல்ல அதிக வாய்ப்பிருப்பதாக எதிர்பார்க்கப்படுகிறது.

**கா**ல்பந்தில் எப்போதுமே சாம்பியன்கள் ஐரோப்பியர்களும் தென் அமெரிக்கர்களும்தான். ஒவ்வொரு முறையும் இவர்களோடு போட்டியிட்டுத் தடுமாறுவதே ஆப்பிரிக்கர்களுக்கும் ஆசியர்களுக்கும் வேலையாகிப் போய்விட்டது. அதிலும் இந்தியா? ●



சிங்கமாகச் சீறிப் பாய்ந்துகொண்டிருக்கும் சூர்யாவின் ப்ளஸ், மைனஸ் என்ன? கோட்டையைப் பிடித்தது எப்படி? கோட்டை விட்டது என்னென்ன என்பதை, சிறப்புச் செய்தியாளர் பரத்ராம் பட்டியலிடுகிறார்...

**ப்ளஸ்:**

- நீங்கள் எல்லாம் எனக்கு அப்பா அம்மா மாதிரின்னு பத்திரிகையாளர்களைக் குறிப்பிடும் ஜகஜால பவ்யம்.
- நடிப்பு வராததற்கு டைரக்டர் வசந்த் திட்டிய போது, ரயிலேறி சினிமாவே வேணாம்னு முடிவெடுத்த சூழலை, தானே மாற்றி பதிமூன்று வருடங்களில் இருபத்தைந்து படங்களை முடித்திருப்பது.
- அமீர், பாலா, மணிரத்னம், முருகதாஸ், கே.வி.ஆனந்த் என இயக்குநர் ஜாம்பவான்களின் நட்பான ஆதரவும், காதலியையே மனைவியாக்கிய இயற்கையின் ஆசியும்.
- ஆரம்பக்கல்வி, காசநோய், சிறுவாணி ஆறு மாசுபடுவதைத் தடுக்க உரத்தக் குரல் என மீடியா பப்ளிசிடிக்காக இல்லாமல், ஆத்மார்த்தமான சமூகப் பொறுப்புணர்வு.
- விஜய், அஜித் போல ரசிகர்களைச் சீண்டிவிடும் மோதலை உருவாக்கும் பஞ்ச் டயலாக் இன்றி, சிவனேன்னு நடிப்பை மட்டும் பார்ப்பது.
- 'விமர்சனங்கள் என் வளர்ச்சியின் உரம்' என்பது போன்ற லேட்டஸ்ட் ஸ்டேட்மென்ட்ஸ்.
- நடிப்போடு கூடுதலாக (சிவாஜி, கமல் வரிசையில்) தம்மை நுகர்வு பொருளாக்கிக் கொள்ளும் சினிமா பிசினஸ் மார்க்கெட்டிங்.





# (+) ப்ளஸ் (-) மைனஸ் = பெரும்புள்ளி



# ஜகஜால பவ்யம்

* அப்பா சிவகுமாரின் வளர்ப்பு விதம்.

**மைனஸ்:**

- ஆரம்பத்தில் கதை சொன்ன டைரக்டர்களுக்கெல்லாம் கால்ஷீட் கொடுத்துவிட்டுப் படங்களில் சொதப்பியது.
- காமெடியில் பிரகாசிக்க முடிந்தாலும், அந்தச் சவாலான சான்ஸை புறக்கணித்துவிட்டு வெறும் ஹீரோவாக மாறிவருவது.
- தம்பி, அப்பாவை பற்றிப் புகழும்போது தமது தாழ்வுமனப்பான்மையை இலேசாக வெளிக்காட்டிக் கொள்வது.
- தினமலர் சர்ச்சையைத் தொடர்ந்து பத்திரிகையாளர்களைத் தாறுமாறாகப் பேசி, உடனே சால்ஜாப்பாய் பல்டியடித்த குழப்பமான சிறுபிள்ளைத்தனம்.
- ஜோதிகாவையும், குழந்தை தியாவையும் மீடியாவிலிருந்து இரும்புத் திரையால் மறைக்கும் செயற்கைப் பிடிவாதம்.
- நடிப்பில் சவாலான முயற்சிகளைப் பெருக்கிக் கொள்வதற்குப் பதில், அப்பா புறக்கணித்த ரசிகர் மன்ற விஷயத்தில் அதிக ஆர்வம் காட்டி பத்தோடு பதினொன்றாக மாற ஆரம்பித்திருப்பது...

- பரத்ராம்

**கொ**ளுத்தித் தள்ளும் கத்திரி வெயில்... இந்த வெயிலின் தாக்கம் நமக்குத் தெரியாமல் இருக்க, நம் உடலும், மனமும் ஒரு சேரத் தேடுவது ஏஸியைதான். கோடை சுற்றுலாவுக்கெனப் போகும் இடங்களில் கூட ஏஸி ரூம்களுக்குத் தான் ஏக கிராக்கி. அவ்வளவு ஏன், சாதாரணப் பேருந்துகளை விட ஏஸி பஸ்களுக்குத் தான் முண்டியடித்து ஓடுகிறார்கள் பொது மக்கள்.

ஆ, ஊன்னா இப்படி ஈஸியாக ஏஸி பக்கம் சாய்வது நல்லதா கெட்டதா என நாம் பார்ப்பவர்களிடமெல்லாம் கேள்வி எழுப்ப, அவர்கள் ஏதோ 'நாயகன்' திரைப்படக் கமல் பாணியில் 'தெரியலியேப்பா' எனக் குரல் கொடுக்க, உடனே ஓடினோம் ஒரு மருத்துவரைத் தேடி. நாம் தேடிச் சென்ற மருத்துவர் சுரேஷ், 'எதையுமே அளவா பயன்படுத்தினா, ஆபத்து வராது. ஏஸி என்னும் அந்த



சுரேஷ்

# ஏஸி, யோசி!

குளிர்சாதனப் பெட்டியையும் அப்படித் தான் அளவா பயன்படுத்தணும். 24 மணி நேரமும் ஏஸியோடவே வாழ்க்கைய வாழ்ந்துக்கிட்டு இருந்தோம்னா, நிச்சயமா நம்ம ஆரோக்கியம் சீக்கிரமே கெட்டுப் போயிடும். மூடிய அறையிலேயே ஏஸி காற்றுக்காக உட்காருவது வைரஸ் கிருமிகளைப் பரப்பிவிடும்' என்றவர் தொடர்ந்து, இவ்வளவு காலம் தான் ஏ/சி அறைல இருக்கணும்னு வரையறை இல்லேன்னாலும், தொடர்ச்சியாகக் குளிர் அறையிலேயே இருக்கக் கூடாது. நீண்ட நேரம் ஏஸியிலேயே இருப்பவர்களில் சிலருக்கு, rhinitis என்று சொல்லக்கூடிய ஒரு நிலை வர வாய்ப்புகள் அதிகம். மூக்கில் சளி, இடைவிடாத தும்மல், மூக்கடைப்பு இவை எல்லாமே இந்த rhinitis செய்யக்கூடிய விளைவுகள்.

அதேபோல சிலருக்குத் தொண்டை வலி, மூச்சுக் குழாயின் மேல் பகுதியில் புண் (laryngitis), உணவுக் குழாயின் மேல் பகுதியில் புண் (pharyngitis), காது வலி போன்றவை ஏற்படும்.

குறிப்பாக ஆஸ்துமா நோயாளிகளுக்கு இந்த ஏஸியின் பாதிப்பு சற்றுக் கூடுதலாகவே இருக்கும். சைனஸ் தொந்தரவு கொண்டவர்களுக்கு cold allergy ஏற்பட வாய்ப்பு உள்ளது. இது ஏதோ ஏஸி பக்கமே போய்டாதீங்கன்னு பயமுறுத்துவதற்காகச் சொல்லவில்லை.. நீண்ட நேர ஏஸி குளிர் என்பதைத் தவிர்த்து விடுவது நல்லது என்ற கருத்தை மட்டும் பொது மக்கள் கடைப்பிடித்தால் போதும்' என்கிறார் பொது நல மருத்துவர், சுரேஷ்.

பேட்டி, படம்: **நளினி சம்பத்குமார்**

# காருக்குள் விஷம்!

**த**ரமான ஏஸியா, ஜில் காற்று நல்லா வருமா? வோல்டேஜ் பிரச்னைகளைத் தாக்கு பிடிக்குமா? அதிக அளவு மின்சாரத்தை இழுக்காமல் இருக்குமா என்று அடுக்கடுக்கான கேள்விகளைக் கேட்டு நல்ல ஏஸியை வாங்குவதெல்லாம் சரிதான். ஆனால், பராமரிப்பு, பராமரிப்புன்னு சொல்லுவாங்களே, அத இந்த ஏஸி விஷயத்துல ரொம்பவே செய்யணும். குறிப்பா, ஏஸிக்குள்ள, பல விதமான காளான் கிருமிகள் (moulds) நம்ம கண்ணுக்குத் தெரியாம நாளொரு மேனிக்கு, வளர்ந்துக்கிட்டு இருக்குமாம். அடிக்கடி ஏசியில் உள்ள ஃபில்டரை சுத்தம் செய்வது, மற்றும், அவ்வப் பொழுது ஏஸியில் உள்ள வென்டிலேட்டரை இயக்கச் செய்து ஏஸியைச் சுவாசிக்க செய்வதன் மூலம் இந்தக் கிருமிகளை ஒழித்து விடலாம் என்கிறது மருத்துவ உலகம்.

ஏஸி காரில் பயணிப்பவர்கள், கருத்தில் கொள்ளவேண்டிய ஒரு முக்கியமான விஷயம் என்னவென்றால், காரில் ஏறிய உடனேயே, கதவுகளை மூடி விட்டு ஏஸியை இயக்கலாகாது. மூடிய கார்களுக்குள், benzene என்ற ஒரு வித நச்சு இருக்கும். காருக்குள் சென்றமர்ந்தவுடன் குறைந்தபட்சம் ஒரு இரண்டு நிமிடங்களாவது கார்க் கதவுகளைத் திறந்து விட்டு, அந்த benzene-ஐ வெளியேற்றிவிட்டு, ஏஸியை ஆன் செய்யுங்கள் என அக்கறையுடன் கேட்டுக் கொள்கிறது சமீபத்தில் வந்த ஒரு மருத்துவ உலகச் செய்தி.

# கல்கி

13.06.2010



ஸ்ரீநிவாச ராகவன் எழுதும்

# கண்டறியாதன கண்டேன்!

ஆலய அரிச்சுவடி தொடர்

அடுத்த இதழில் ஆரம்பம்...


# போடுங்கய்யா தீர்மானம்-6

## உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு

ரமேஷ், ஆகாஷ், கருணாநிதி, சூர்யா என்பதையே தமிழ்ப் பெயர்களாக நம்பத் துவங்கி விட்ட இத்தருணத்தில், தமிழ்ப் பெயர்களே அற்ற தமிழர்களாக மாறாமலிருக்க குழந்தைகளுக்குத் தமிழில் பெயர் சூட்டுவதை ஆதரிக்க வேண்டும். அந்த முயற்சியினை, நல்ல செயல்பாட்டினை உற்சாகப்படுத்தும் வண்ணமாக, தூய தமிழ்ப் பெயர்களை தமிழக அரசே தேர்வு செய்து, அரசாணையில் அச்சிட்டு வெளியிட வேண்டும். தமிழில் பெயர் சூட்டப்பட்ட குழந்தைகளுக்கெனப் பின்னாளில், கல்வி மற்றும் வேலை வாய்ப்புகளில் குறிப்பிட்ட அளவில் சிறப்புச் சலுகைகளை அரசு அறிவிக்க வேண்டும். இதனை மாநாட்டில் தீர்மானமாக நிறைவேற்ற வேண்டும்.

- பா.சந்திரகாந்த்,
பெறியாளர், திருவானைக்காவல்.



# வெற்றிகரமான 24ம் ஆண்டில்
# அஜந்தா ஸ்கூல் ஆப் ஆர்ட்ஸ்



உங்கள் வாழ்வை வளமாக்கும் ஓவியக்கலை. அற்புதமான அஞ்சல் வழிப் பயிற்சி. நேர்த்தியான நேர்முகப் பயிற்சி.

விவரப்புத்தகம் இலவசம்

## ஓவிய ஆசிரியர் பயிற்சி (FREE HAND DRAWING)

வரும் நவம்பரில் அரசுத் தொழில் நுட்பத்தேர்வு Free Hand out line and Model Drawing - Higher grade தேர்வு எழுதி நீங்களும் ஓவிய ஆசிரியர் ஆகலாம். கல்வித்தகுதி: SSLC, +2, ஆண்கள், பெண்கள், அரசு மற்றும் தனியார் பள்ளிகளில் ஏராளமான வேலைவாய்ப்பு.

## ஓவிய நுண்கலைப் பயிற்சி (FINE ARTS)

ஓவியக்கலையின் நுட்பங்களைக் கற்று, உங்களிடம் பொதிந்துள்ள படைப்பாற்றலை வெளிப்படுத்துங்கள். வண்ண ஓவியங்களை வரைந்து, கலைவானில் நட்சத்திரமாக மின்னுங்கள். உங்கள் திறமை மெருகேற, பலரும் உங்களைப் பாராட்ட, அற்புதமான அஞ்சல் வழிப் பயிற்சி.



## சிறுவர் சித்திரப் பயிற்சி (CHILDRENS ART COURSE)

உங்கள் குழந்தைகளின் எதிர்காலம் பற்றி, உங்கள் கனவு எதுவானாலும் இருக்கட்டும். ஆனால் ஓவியம் கற்றுக் கொடுங்கள். அது அவர்களை உன்னதமிக்கவர்களாக உருவாக்கும். இது ஒரு தியானம். சிந்தனையும், செயலும் சீர் பெறும். நேரம் பயனுள்ளதாக அமையும். கற்பனையும், படைப்புத்திறனும் வளரும்.

## தஞ்சை ஓவியம் பயிற்சி (TANJORE PAINTINGS)

நெஞ்சையள்ளும் தஞ்சை ஓவியங்கள் (Tanjore Painting) வரையக் கற்று, உங்கள் ஓய்வு நேரத்தை வருமானம் மிகுந்த பொன்னான நேரமாக மாற்றுங்கள். இல்லத்தரசிகளுக்கு இது ஒரு வரப்பிரசாதம். மாதம் ரூ.15,000/- வரை சம்பாதிக்கலாம்.

- கமர்ஷியல் ஆர்ட்
- பத்திரிகை ஓவியம்
- ஸ்கிரீன் பிரிண்டிங்

ஆகிய பயிற்சிகளும் உண்டு. மேலும் விவரமறிய உங்கள் முகவரியை ஒரு தபால் கார்டில் எழுதி அனுப்புங்கள். அல்லது தொலைபேசியில் தெரிவியுங்கள் அல்லது SMS அனுப்புங்கள். இலவச விவரப் புத்தகம் உங்கள் வீடு தேடி வரும்.



**AJANTHA SCHOOL OF ARTS**

(GOVT. REGD)

NO. 6, MUTHU NAGAR, POONAMALLEE, CHENNAI - 600056.

PH : 044-26490363, CELL: 9381050477, 994039708.

Registered with the Registrar of Newspaper of India under No.104/1157* Registered No.TN/CC (S) DN / 144 / 09 - 11* Licensed post without prepayment under PMG's Licence No.WPP TN / CC (S) DN / 70 / 09 /11* Registered as a Newspaper in Srilanka.

86 வருட பட்டு பாரம்பரியம்

RmKV

பிரைடல் செவன்

உங்கள் திருமணத்தின் நிச்சயதார்த்தம்
முதல் கிரஹப்பிரவேசம் வரையிலான ஏ
சுபமுகூர்த்தங்களையும் கொண்டாடுங்கள்.
ஆரெம்கேவியின் பிரைடல் செவனோடு!
உங்களுக்காகவே ஆரெம்கேவியின் கைதேர்ந்
நெசவாளர்களால் உருவாக்கப்பட்ட அற்புதப்
படைப்புகள்என்றென்றும் உங்கள் திருமணத்தை
மகிழ்வோடு மனதில் நினைக்கச் செய்யு
மறக்கமுடியாத உங்கள்
திருமணத்திற்கான மகிழ்ச்சிப்படைப்புகள்



கோயம்புத்தூர்
ப்ரூக்-பீல்ட்ஸ்
ph 0422 2255105
திருநெல்வேலி
வண்ணார்பேட்டை
ph 0462 2503105
சென்னை | பனகல்பார்க்
ph 044 28144445

toll free no 1800 425 3105
for online purchases log on
www.rmkv.com

subrata bhowmick design